# கல்கி

இன்னும்மே! காபி, டிபன், சோறு, கொயம்பு, பாக்க கலர் டி. வி. எல்லாம் போதாதும்மே! என் ஊட்டுக்காரர் கொய்ந்த குட்டிங்களோட தெனம் வந்து குளிச்சிட்டுப் போவாரு!... இன்னு சொல்றே. தண்ணி பஞ்சம்!

KALKI 5-6-83 ரூ. 1.20



# 4,00,000

## மேற்பட்ட வயல்களின் உயிர்நாடி



# என்பீல்ட் — வில்லியர்ஸ்

**கெரசின்** பம்பு செட்டுகள்

Villiers

IS:7347

ISI

வான்மழை போல் உங்கள் பயிருக்கு உயிர் ஊட்டுகின்றன.

மின் வெட்டுகளைப் பற்றி கவலை வேண்டாம்.
பயிர் வாடும் என்ற பயம் வேண்டாம்.

மிக இலேசானவை — நிலம் விட்டு நிலம் எடுத்துச் செல்ல எளிதானவை.

சிறு விவசாயிகளுக்கு மிக ஏற்றவை

3 ஏக்கர் வரை — 2 ஹார்ஸ் பவர் பம்பு செட்டு

5 ஏக்கர் வரை — 3.4 ஹார்ஸ் பவர் பம்பு செட்டு

- எடை குறைவு — எண்ணெய் செலவும் குறைவு
- அரசுக் கடன்களுக்கும் மானியங்களுக்கும் அங்கீகாரம் பெற்றவை.
- உறுதியானவை, நம்பிக்கையானவை, நீடித்து உழைப்பவை.



## என்பீல்ட்

304 & 305, அண்ணா சாலை,
சென்னை 600 018

புல்லெட் மோட்டார் சைக்கிள் அளிப்பவர்கள்

ADWAVE/EIA/1949/R

அண்மையில் சென்னைக்கு வந்திருந்தபோது அரசியல்ரீதியாகச்சில அபத்தங்களைப் பேசிய போதிலும் (ஒதுக்கிவிடுவோம்) வரவேற்கத்தக்க பல கருத்துக்களையும்.

# சொன்னார் ராஜீவ்

● பிற்படுத்தப்பட்ட சமூகங்களின் முன்னேற்றத்துக்காகச் செய்யப் படுகின்ற காரியங்களால் உண்டாகும் பலனைச் சில நேரங்களில் அந்தச் சமூகங்களின் மேல் மட்டத்தில் உள்ள ஒருசில குடும்பங்களே அடைகின்றன. எனவே பொருளாதார நிலையையும் பிற்பட்டோரை நிர்ணயிப்பதற்கான அளவு கோல்களில் ஒன்றாகச் சேர்க்க வேண்டும்.

● நீண்ட காலப் பயன் அளிக்கக் கூடிய தொலை நோக்குத் திட்டங்களை நிறைவேற்றுவதில் உடனடிப் புகழ் பாராட்டு ஆட்சியாளருக்குக் கிடைக்காமல் இருக்கலாம். அந்த உடனடிப் புகழ் பாராட்டை விட சமுதாயத்திற்கு நீண்ட நெடுங்காலத்துக்குப் பயனளிக்கக் கூடிய திட்டங்கள்தான் முக்கியம்.



● அஸ்ஸாமிலும் பஞ்சாபிலும் பிரிவினைச் சக்திகள் தலை தூக்குகின்றன. தென்னாட்டில் சில மாநிலங்களிலும் பிரிவினைக் குரல்கள் கேட்கத் தொடங்கியுள்ளன. எந்த ஒரு தனி மாநிலமும் தானாக அனைத்தையும் சாதித்து விட முடியாது. ஒன்றுபட்ட ஐக்கிய சக்தி வாய்ந்த இந்தியாவினால்தான் பிரச்னைகளுக்குத் தீர்வு காண முடியும்.

● நுழைவு வரி பொதுமக்களுக்குக் கூடுதல் செலவை ஏற்படுத்தும். வரி விதிப்பு அவசியமான ஒன்று. ஆனால் வரிகள் எந்தத் தரப்பினரையும் பெருமளவில் பாதிக்காதபடி இருக்க வேண்டும். ஒரு வரியை விதிக்க அரசுக்கு உரிமை இருக்கும்போது அதனால் பாதிக்கப்படுவோருக்கு அதற்கு எதிர்ப்புத் தெரிவிக்கவும் உரிமை உண்டு. நுழைவு வரி அரசியல் சாசனத்தின் சில பிரவுகளுக்கு முரணானது.

● சட்ட மன்றத்தில் செயலாற்றுவதிலும் தமிழக இ.காங்கிரஸ் பலவீனமாய் உள்ளது. மக்கள் மத்தியில் தொண்டு செய்வதிலும் பலவீனமாய் உள்ளது. இந்நிலையில் மக்களுக்கு உங்கள் மீது எப்படி மரியாதை ஏற்படும்? மாநிலக் கட்சிகளுடன் சமரசம் செய்து கொண்டு நெடுங்காலம் இருந்ததால் கட்சி பலவீனப்பட்டுப் போயிற்று. இனி மாநிலக் கட்சிகளுடன் தமிழக இ. காங்கிரஸ் உறவு இராது.

● மாநிலங்கள் மீது தலைவரை மத்திய அரசு திணிக்கக் கூடாது. இது நற்பலன் தருவதில்லை. கட்சியின் அடிமட்டத்தைப் பலப்படுத்தித் தலைவர்கள் படிப்படியாக உருவாகி வளர வகை செய்ய வேண்டும்.

● ''பிற்படுத்தப்பட்டோர் வாழ்க''என்பது போன்ற கோஷங்கள் தவறானவை. தாழ்வு மனப்பான்மையையும் தாழ்த்தப்பட்டோருக்கான சலுகைகளையும் கூடிய விரைவில் உதறிவிட முயல வேண்டுமே தவிர அதைப் பற்றிக் கொண்டு பயனடைவதையே குறிக்கோளாக்கிக் கொள்ளக் கூடாது.

● கண்ட்ரோல்களை அடியோடு நீக்கிவிட வேண்டும் என்று நான் கூற மாட்டேன். அமெரிக்காவில் கூடக் கண்ட்ரோல்கள் உண்டு. ஆனால் இங்கே நிலவும் ஏராளமான கண்ட்ரோல்களும் சட்டங்களும் விதிகளும் யோக்கியமான பிரஜையையும் அயோக்கியனாகுமாறு பலவந்தப்படுத்துகின்றன. கண்ட்ரோல்கள் குறைந்தபட்ச அளவில்தான் இருக்க வேண்டும். சிறிய வியாபாரிகளுக்கு உள்ள இடைஞ்சல்கள் நீக்கப்பட வேண்டும். டில்லியில் ஒரு வியாபாரி தினந்தோறும் குறைந்த பட்சம் 26 ஃபாரங்களையாவது பூர்த்தி செய்தாக வேண்டும். இதை யாரால் பொறுத்துக் கொள்ள முடியும்?

புகைப்படம்: சுபா

சென்னை வந்திருந்த கர்நாடக முதல்வர் திரு. ஹெக்டே

பங்களூர் திரும்பு முன்னர் விமான

நிலையத்தில் 'கல்கி'க்கு அளித்த சிறப்புப் பேட்டி



# நம்பிக்கைகள் வீணாவதில்லை!

? கர்நாடகத்தில் ஜனதா அரசு பதவி ஏற்றதிலிருந்து இதுவரை அரசு செய்த பணிகளில் சிறப்பான சிலவற்றைக் கூற முடியுமா?

! நாங்கள் தேர்தலின்போது கொடுத்த வாக்குறுதிகளை ஒவ்வொன்றாக நிறைவேற்றும் பணியில் இருக்கிறோம். நெடுங்காலமாக நகரசபை, பஞ்சாயத்து தேர்தல்கள் நடக்காமல் உள்ளன. அவை கூடிய விரைவில் நடத்தப்பட இருக்கின்றன. அதில் ஓட்டுப் போடும் வயதை 18 ஆகக் குறைத்திருக்கிறோம். கட்சித் தாவல் தடுப்பு மசோதா கொண்டு வந்திருக்கிறோம். ஊழல் புகார்களை விசாரிக்க அமைப்புகள் ஏற்படுத்தப் போகிறோம். அதிகார மையங்களைப் பரவலாக்கி இருக்கிறோம். அன்ந்யோதயத் திட்டத்தையும் குறிப்பிடலாம். மேற்குறிப்பிட்டவற்றையெல்லாம் விட மிக முக்கியமானது ஜனதா அரசு ''மக்கள் அரசு'' என்ற எண்ணத்தைமக்களிடையே உருவாக்கி யிருக்கிறோம். இதை நான் பெரிய சாதனையாகக் கருதுகிறேன்.

? உங்கள் அரசு பாரதிய ஜனதா, கம்யூனிஸ்ட் கட்சிகளின் ஆதரவையும் பெற்றுத்தான் பதவியில் நீடிக்கிறது. இது ஆட்சிக்கு ஒரு பாதுகாப்பற்ற நிலையை உண்டாக்கவில்லையா?

! பெரும்பான்மை பலம் மிக்க ஒரு அரசு ஆட்சி செய்தாலே யதேச்சாதிகாரப் போக்கு தலையெடுக்கலாம். இப்போதோ நாங்கள் மிகவும் பொறுப்புடன் செயலாற்ற வேண்டிய நிலையில் உள்ளோம். சர்வாதிகார சக்திகள் மீண்டும் ஆட்சியில் அமர்ந்து விடாமல் இருக்க பி.ஜே.பி.யும், கம்யூனிஸ்ட், மற்றும் சுயேச்சை உறுப்பினர்களும் எங்களுக்கு ஆதரவு அளித்துள்ளார்கள். அவர்கள் வைத்துள்ள நம்பிக்கை வீண் போகாமல் நடப்பது எங்கள் கடமையாகிறது. எந்தக் காரணம் கொண்டும் ஆதரவு தரும் கட்சிகளை சங்கடத்தில் மாட்டி விடும் சூழ்நிலை உருவாகுமாறு ஆட்சி நடத்த மாட்டோம். மக்கள் நலன் என்ற ஒன்றை மட்டும் மனதில் நிறுத்திப் பணிகளைச் செய்கிறோம். மக்களுக்கு நல்லது செய்யும் பணிகளில் எந்தக் கட்சியும் தடையாக இருக்காது அல்லவா?

? மாநிலங்கள் எந்த அளவுக்கு அதிகாரங்கள் பெற்றிருக்க வேண்டும் என்று கருதுகிறீர்கள்?

! இப்போது சில சில்லறைப்பிரச்னைகளுக்குக் கூட மத்திய அரசின் உதவி தேவையாக இருக்கிறது. நிதி வசதிக்குக் கையேந்தி நிற்க வேண்டி யிருக்கிறது. வேறு பல அதிகாரங்களையும் மாநில அரசு பெற்றாக வேண்டும். இப்போது இருக்கும் அரசியல் சட்டப்படி மாநிலங்களின் அதிகாரங்களில் மத்திய அரசு குறுக்கிட வழி இருக்கிறது. இது மாற்றப்பட வேண்டும். பொருளாதாரத்தைப் பொறுத்தவரையில், அந்தந்த மாநிலங்களில் வசூலாகும் வரிப் பணத்தில் மாநிலத்தின் நியாயமான பங்கை அதன் வளர்ச்சிக்குக் கொடுக்க வேண்டும். வரி விதிப்பு முறையையும் மாற்றியமைக்க வேண்டும். மத்திய அரசு உற்பத்தி (எக்ஸைஸ்) வரியை உயர்த்தினால் விலைவாசிகள் உயர்ந்து போகின்றன. ஆனால் மக்களோ மாநில அரசினால் விலைவாசிகளைக் கட்டுப்படுத்த முடியவில்லை என்று தவறாக எண்ண வாய்ப்பிருக்கிறது. மாநில முதல்வர்கள் அனைவரும் ஒன்றுபட்டுப் பேசி இதில் ஒருமித்த கருத்தை உருவாக்கலாம்.

? நீங்கள் கூட்டிய தென் மாநில முதல்வர்கள் மாநாட்டைத் தேசிய ஒருமைப்பாட்டுக்கு எதிரானது என்று கூறுகிறார்களே!

! அண்டை மாநில முதல்வர்கள்மனம்விட்டுப் பேசினால் பல பிரச்னைகளைத் தீர்க்க முடியும். இதற்கு ஓர் எடுத்துக்காட்டு கிருஷ்ணா நதி நீர் ஒப்பந்தம். எதற்கெடுத்தாலும் டெல்லியை நோக்கிக் காவடி எடுத்துச் செல்வது தேவையற்ற ஒன்று. காவிரி நதி நீர் விஷயத்தில் கூட பேசித் தீர்வு காண முடியும் என்பது எனது அசைக்க முடியாத நம்பிக்கை.

இந்த மாநாட்டைத் தேசிய ஒருமைப்பாட்டுக்கு எதிரானது என்று கூறுகிற இவர்கள் அஸ்ஸாம் பிரச்னையையும், பஞ்சாப் பிரச்னையையும் தீர்க்க முடியாமல் தவிக்கிறார்களே! அவை ஒருமைப்பாட்டுக்குக் குந்தகம் விளைவிக்கக் கூடியன அல்லவா? அவற்றை முதலில் தீர்க்கட்டும். அதை விட்டு விட்டு, மாநில முதல்வர்கள்







# நம்பிக்கை தந்த நாள்

25–5–83: சென்னை வாசிகள் ஒரு கனவு நனவாகப் போகிறதென நம்பிக்கை பெற்ற நன்னாள்.

(1) சென்னைக்கு விஜயம் செய்த பாரதப் பிரதமர் காஞ்சி காமகோடி பெரியவாளின் 90வது ஜெயந்தி விழாவில் பங்கேற்றார். அச்சமயம் ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகளுடன் உரையாடுகிறார்.

(2) மாலையில் நேரு ஸ்டேடியத்தில் தெலுங்கு கங்கா துவக்க விழா. விழாவில் பங்கேற்ற பிரதமரும், தமிழக ஆளுனரும், நான்கு மாநில முதல்வர்களும் தேசிய கீதத்தின்போது மரியாதை செலுத்துகின்றனர்.

(3) தமிழகத்துக்கு நீர் வழங்கி உதவுகிற கர்நாடகா, ஆந்திரா, மகாராஷ்டிரா முதல்வர்களுக்கு தமிழக மக்கள் சார்பாக நினைவுப் பரிசு வழங்கிக் கௌரவிக்கிறார் தமிழக முதல்வர்.

புகைப்படங்கள்: சுபா



3





பரஸ்பரம் மனம் விட்டுப் பேசுவதை ஒரு மைப் பாட்டுக்கு எதிரானது என்று கூறு வானேன்!

? உங்கள் அரசைக் கவிழ்க்க நடக்கும் முயற்சிகள் பற்றி....?

! எங்கள் கட்சி மீது மக்கள் நம்பிக்கை வைத்துள்ளார்கள். எங்கள் எம். எல். ஏ.க்கள் கட்டுப்பாட்டுக்கு உதாரணமாகத் திகழ்பவர்கள். 1979ல் மத்தியில் ஜனதா அரசைக் கவிழ்த்தது போல் கர்நாடகத்திலும் கவிழ்க்க அனுமதிக்க மாட்டோம். எங்களைக் கவிழ்க்க முயற்சி செய்தவர்களுக்கு கனகபுரா மக்கள்தான் தீர்ப்பு அளித்து விட்டார்களே!

? என். டி. ராமராவ் அவர்கள் கூட்டும் எதிர்க் கட்சித் தலைவர்கள் கூட்டத்தில் இ. காங்கிரஸுக்கு தேசிய அளவில் மாற்று அமைப்பு ஒன்று ஏற்படுத்தப்படுமா?

! இது பற்றி நான் தற்போது ஒன்றும் சொல்வதற்கில்லை.

? ஜனதாவில் இருந்து பிரிந்து போனவர்கள் தானே தற்போது மறுபடி இணைய வேண் டும்?

! (சிரிக்கிறார்) ஆமாம்... முதலில் கூட்டம் நடக்கட்டும். பிறகு யோசிக்கலாம்.

? ஜனதா கட்சி மீண்டும் மத்தியில் ஆட்சிக்கு வர வாய்ப்புள்ளதா?

! ஏன் முடியாது? நம்பிக்கையோடு பணிகளைச் செய்து வந்தால் நிச்சயம் வாய்ப்புண்டு. 71ல் பழைய (ஸ்தாபன) காங்கிரஸ் கட்சியாக இருந்தபோது தோற்றோம். ஆறு வருடங்கள் கழித்து ஜனதா என்ற பெயரில் மீண்டும் ஆட்சிக்கு வந்தோம்! 1980 தேர்தலுக்கு அப்புறம் ஜனதா கட்சிக்கு இனி இந்த நாட்டில் இடமே இல்லை என்றார்கள். கர்நாடகத்தில் இப்போது ஆட்சியில் இல்லையா? ஆக நம்பிக்கையோடு பணியாற்றினால் நிச்சயம் மக்களுக்குச் சேவை செய்யும் வாய்ப்பினை மக்களே வழங்குவார்கள் என்பது உறுதி.

**(நமது நிருபர்)**

# உலக மகா மோசடிகள்!

**அண்மையில் வெளிநாட்டில் ஒரு நிருபரால் கண்டுபிடிக்கப் பட்டதாகக் கூறப்பட்ட இட்லரின் டைரிகள் பொய்யானவை என நிரூபிக்கப்பட்டு விட்டன. இது போன்ற மோசடி நடைபெற்றது இது முதல் முறையல்ல...**

● பிரான்ஸ் நாட்டைச் சார்ந்தவன், டெனிஸ் ரெயின் லூகாஸ். இவன் தன்னிடம் ஆர்க்கிமிடீஸ், ஏசுவைக் காட்டிக் கொடுத்த ஜூடாஸ் போன்றவர்கள் கைப்பட எழுதிய 27000 காகிதங்கள் இருப்பதாக அறிவித்தான். மேலும் புவி ஈர்ப்பு விசையை ஐசக் நியூட்டன் கண்டுபிடிக்கவில்லை, பாஸ்கல் தான் கண்டுபிடித்தார் என்பதற்கான ஆதாரங்கள் தன்னிடம் சிக்கியிருப்பதாக இவன் அறிவித்தான். ஆனால் இவன் கையிலிருந்த ஆவணங்கள் அனைத்தும் பொய்யானவை என நிரூபிக்கப்பட்டன.

● ஷேக்ஸ்பியரின் 'ஹேம்லெட்', கிங் லியர்' நாடகங்களின் கைப் பிரதிகள் தன்னிடம் சிக்கியிருப்பதாக அறிவித்தான் பிரிட்டனைச் சேர்ந்த வில்லியம் ஹென்றி. ஆனால் இவன் செய்த கோளாறுகளே இவனைக் காட்டிக் கொடுத்துவிட்டன.

● இங்கிலாந்தைச் சார்ந்த தாமஸ் சாட்டர்டன் என்ற 15 வயதுச் சிறுவன் சில கவிதைகளை இயற்றினான். தான் இயற்றிய அந்தக் கவிதைகளைப் பதினைந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த தாமஸ் ரௌவலி என்ற பிட்சு இயற்றியதாகக் கூறத் தக்க வகையில் ஆவணங்களைத் தயாரித்தான். நாட்டு மக்களின் கவனம் முழுவதும் அவனை நோக்கித் திரும்பியபோது, அவன் தன் பித்தலாட்டத்தை ஒத்துக் கொண்டான். முடிவாக பதினேழாவது வயதில் தூக்கிட்டுத் தற்கொலை செய்து கொண்டான்.

● சிலருடைய பித்தலாட்டங்கள் ஒரு நாட்டை உருவாக்கவும் பயன்பட்டுள்ளன. பிரான்ஸ் நாட்டுப் படையில் பணிபுரிந்த யூதரான கேப்டன் ஆல்பிரட் டிரைபஸ் என்பவர் ராணுவ இரகசியங்களை எதிரிகளுக்கு அனுப்பியதாகச் சில அதிகாரிகள் போலி ஆவணங்களைத் தயாரித்தனர். இதன் விளைவாக யூதரான கேப்டன் ஆல்பிரட் டிரைபஸ் நாடு கடத்தப்பட்டு ஒரு தீவில் ஆயுள் தண்டனை அனுபவிக்க அனுப்பப் பட்டார். இந்த நிகழ்ச்சி பற்றி உண்மைச் செய்திகளைச் சேகரிக்க வந்த ஒரு நிருபருக்கு 'யூதர்களின் ராஜ்யம்' என்ற நூலை எழுதும் எண்ணம் ஏற்பட அவர் அந்த நூலை எழுதி முடித்தார். இந்த நூலே யூதர்களுக்கென தனி நாடு தேவை என்ற ஆர்ப்பாட்டத்திற்கு வித்திட்டது. அந்த வித்தின் விளைவே இன்றைய இஸ்ரேல்.

**—யெம்ஜி**

நன்றி: **டைம்**



**தடையின்றிப் பேசலாம்**
**ஆங்கில மொழிதனிலே**

**கடிதினிலே எழுதிடலாம்**
**கடிதங்கள் ஆங்கிலத்தில்**

Big size
384 Pages




Big size
394 Pages

Price for each
Rs. 24
postage 4/-

## RAPIDEX
## ENGLISH SPEAKING COURSE

எளிய நடையில் பயனுற அமைந்த 'ரெபிடெக்ஸ் இங்கிலீஷ் கோர்ஸி'னைத் தாமே பயின்று ஆங்கில மொழி வட்டாரங்களில் வெற்றி நடை போடுங்கள்.

மொழியியல் அடிப்படையில் இதன் புதுமுறை அமைப்பும், தெளிவான மொழி நடையும் படித்த மாத்திரத்தில் மனதிற் பதியவைக்க வல்லது.

- இதுவரை 80 லட்சம் பேர் படித்துப் பயன்பெற்றுள்ளனர்,
- ஆசிரியர்கள், அறிஞர்கள் கல்வியாளர்களால் பரிந்துரைக்கப் பட்டது.

பெயர் பெற்ற பத்திரிகைகளின்
- விமரிசனக் குழுவினரால் புகழாரம் சூட்டப்பட்டது.

*AVAILABLE AT leading book shops. A. H. Wheeler's and Higginbotham's Railway Book stalls throughout India*

## *RAPIDEX*
## *SELF LETTER DRAFTING COURSE*

இதன் சிறப்பியல்புகள் —

- விதவிதமான வாக்கியங்கள், பல வேறு சொற்றொடர்கள்.
- ஒரே சூழலில் விதவிதமான வாக்கியங்கள், பல்வேறு சொற்றொடர்கள்.
- விரும்பும் வாக்கியங்களை நீங்களே தேர்ந்தெடுக்கலாம்.
- வேண்டியபடி கோர்வையாக அமைத்துக்கொள்ளலாம்.
- நீங்கள் விரும்பிய கடிதம் தயார்.

மன உளைச்சலின்றி முதற்தரமான கடிதங்கள் வரைய அற்புத சாதனம்.

மூன்று பகுதிகளாக அமைந்த இப்புத்தகம் சொந்த, சமூக, வணிகக் கடிதங்கள் வரையவும், வேலைக்கான விண்ணப்பங்கள் எழுதவும் நம்பகமான வழிகாட்டி.

or ask by V.P.P. from

**PUSTAK MAHAL** KHARI BAOLI DELHI-110006
New Show Room : 10-B, Netaji Subhash Marg, Darya Ganj, New Delhi-110002

VANDANA/PM/Tam 2


தண்ணியை பணமா மாத்தறேன்!...
பணத்தைத் தண்ணியா செலவழிக்கறேன்!
துவக்க விழாவுக்குப் பல லட்சம் செலவழித்து கிருஷ்ணா நதிநீர் திட்டத்திற்கு முதல் தவணையாக தமிழ்நாடு 30 கோடி ரூபாய் கொடுத்துள்ளது.
அடேயப்பா எம்மாம் பெரிய கைத்தடி!
தேசிய மகாநாடு கூட்டணியுடன் தேர்தல் உடன்பாடு
சீச்சீ! இந்தப் பழம் புளிக்கும்!

1983 ஜூன் 5
ருத்ரோத்காரி வைகாசி 22
மலர் : 41 இதழ் : 45





கல்கி

# நெஞ்சுக்கு நீதி!

குடியரசுக் கட்சியைச் சேர்ந்த நிக்ஸன் மீது ஊழல் குற்றச்சாட்டு நிரூபணமான பிறகு அக்கட்சியின் செல்வாக்கு அமெரிக்காவில் தாழ்ந்து போயிற்று. சிலகாலம் சென்று மறுபடி குடியரசுக் கட்சியைச் சேர்ந்த ஒருவரே ஜனாதிபதி பதவிக்கு வர முடிந்தது. ஆனால் பதவிக்கு வந்தவர் நிக்ஸன் அல்ல ரேகன். நிக்ஸன் மீண்டும் தலையெடுக்கவே முடியவில்லை. பிரிட்டனில் பொர்ஃபியூமோ என்ற அமைச்சர் மீது தேசப் பாதுகாப்புக்குக் குந்தகமான விதத்தில் நடந்து கொண்டதாகக் குற்றச்சாட்டு. ராஜினாமா செய்தார். பெரும் செல்வந்தரான அந்தப் பிரபு மறுபடி அரசியல் அரங்கில் நுழையவே முடியவில்லை. ஆனால் அவருடைய கட்சி வேறு பல தலைவர்களைத் தோற்றுவித்து மக்கள் மதிப்பில் உயர்ந்தது.

ஆனால் நம் நாட்டிலோ...? ஷா கமிஷன் தீர்ப்புப்படி பல அநீதிகளை இழைத்த இந்திரா காந்தியே மறுபடி பிரதமர் பதவியை அலங்கரிக்கிறார். அவரை விட்டால் அந்தக் கட்சிக்கு வேறு கதியில்லை. அந்த உயர் பதவியை வகிக்கக் கூடிய வேறு தலைவர்களை அக்கட்சியினால் தோற்றுவிக்க முடியவில்லை. தமிழகத்தை இன்று ஆளும் அ. தி. மு. க. மக்களின் ஆதரவை இழந்து மீண்டும் தி. மு. க. ஆட்சியைக் கைப்பற்றுவதாகவே வைத்துக் கொண்டால் மறுபடி முதல்வர் பதவியை வகிக்கப் போகிறவர் யார்? சந்தேகமே வேண்டாம், சர்க்காரியா கமிஷன் தீர்ப்புப்படி பல அநீதிகளை இழைத்துள்ள கருணாநிதிதான்.

இந்த வித்தியாசம் நமது ஜனநாயகத்தின் நோயுற்ற நிலையையும் மேல் நாட்டு ஜனநாயகங்களின் ஆரோக்கியத்தையும் உணர்த்தும். இங்கு நடப்பன சட்டப்படி சரியாக இருக்கலாம்; ஆனால் நெஞ்சுக்கு நீதி? நமக்குக் கிடைக்கவில்லை.

இது ஒருபுறமிருப்பினும் கலைஞர் கருணாநிதி 59 பிராயம் முடிந்து 60ம் ஆண்டில் அடியெடுத்து வைக்கும் இத்தருணத்தில் அவரை மனமார வாழ்த்தி பல்லாண்டு கூறுவதில் நமக்குச் சிறிதும் தயக்கமில்லை. ஆட்சியில் இருந்தபோது அவர் காட்டிய சுறுசுறுப்பு நம்மை வியக்க வைத்தது. அண்ணாவின் அமைச்சரவையில் பொதுப்பணித் துறை பொறுப்பேற்ற போது முந்தைய காங்கிரஸ் ஆட்சியில் கவனிக்கப்படாமலே கிடந்த நூற்றுக் கணக்கான கோப்புக்களை ஒருசில நாட்களிலேயே பைசல் செய்து ஒரு 'ரிகார்ட்' ஏற்படுத்தினார். 'அண்ணாவுக்குப் பிறகு யார்?' என்ற கேள்வி எழுந்தபோது ராஜாஜி, 'கருணாநிதியின் செயல் திறன் வேறு யாருக்கும் வராது' என்றுதான் கருதினார். ஆனால் துரதிர்ஷ்டவசமாக விரும்பத் தகாத பல காரியங்களை முதல்வர் கருணாநிதி செய்யப் போக அதன் பின் விளைவுகள், அவரை ஆட்சித் தலைவர் என்ற ஆசனத்திலிருந்து இறக்கி எதிர்க் கட்சித் தலைவர் என்ற பீடத்தில் அமர்த்தியுள்ளன.

ஜனநாயகத்தில் ஆட்சிப் பணி அளவுக்கு எதிர்ப்புப் பணியும் முக்கியமானது. அதிலும் ஆளும் கட்சிக்கு சட்ட சபையில் அபரிமித பெரும்பான்மை இருக்கும்போது எதிர்க் கட்சித் தலைவரின் பொறுப்பு மிக அதிகமாகிறது. இதை உணர்ந்து ''எமகாதகர்'' என்று அதிசயத்துடன் வர்ணிக்கும் அளவில் கருணாநிதி எதிர்ப்புப் பணியைச் செவ்வனே ஆற்றி வருகிறார். எந்தப் பிரச்னையிலும் ஆழ்நோக்கு, தெளிவான சிந்தனை, எளிதில் விளங்க விண்டுவைக்கும் திறன், புள்ளி விவரங்களை விரல் நுனியிலிருந்து உதிர்க்கும் ஆற்றல் ஆகியன நம்மைப் பிரமிக்க வைக்கின்றன. அந்த அளவில் நெஞ்சுக்கு நீதி — கிட்டத்தான் செய்கிறது!

---

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்

# கருணை மௌனக் காஞ்சி முனிவர்

**என்.ராமேசன்**

**[பேரறிவாளர் திரு என்.ராமேசன் (ஐ.ஏ.எஸ்) ஆந்திர மாநில அரசில்' மிக உயர்ந்த பதவிகளை வகித்தவர். சில மாதங்களுக்கு முன் காலமாகி விட்ட இவரது கட்டுரை ஒன்று அண்மையில் டெக்கான் கிரானிகளில் பிரசுரமாகியுள்ளது. காஞ்சிப் பெரியவரின் மௌனம் போதிக்கும் ஞானம் பற்றி ஆழ்ந்த உள்ளுணர்வுடன் எழுதி யுள்ளார்.]**

''ஆலமரத்தின் அடியில் ஓர் ஆச்சரியம்! தொண்டுக் கிழவர்கள் சீடர்களாக இருக்க ஓர் இளைஞன் குருவாய் அமர்ந்திருக்கிறான். இந்தக் குரு விளக்கம் தருவதோ மௌனத்தினால்; ஆயினும் சீடர்களின் சங்கைகள் தெரிந்து விடுகின்றன'' — இப்படி தட்சிணாமூர்த்தியைப் பற்றி சுலோகம் உண்டு.

சித்ரம் வடதரோர் மூலே வ்ருத்தா: சிஷ்யா
குருர்யுவா
குரோஸ்து மௌநம் வ்யாக்யானம் சிஷ்
யாஸ்து சின்ன ஸம்சயா:

மௌனத்தினால் எப்படி உபதேசிக்க முடியும் என்று வியப்பவர்கள் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளான ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி ஸ்வாமிகளிடம் இதன் உயிருதாரணத்தைக் கண்டு கொள்ளலாம்.

நாம் நமது அன்றாட வாழ்வின் இறுக்கங்களுக்கும் நெரிப்புக்களுக்கும் மேம்பட்டு எழுந்து, மிகவும் ஸ்வல்பமான அளவுக்கேனும் திவ்ய சக்திக்கு ஆட்பட வேண்டுமெனில் ஜகத் குருவின் திரு முன் நின்று அவரது காந்தியில் சூரிய ஸ்நானம் செய்து கொண்டிருந்தால் போதும். இது நிரூபணமான உண்மை; அநுபவ ஸித்தமான உண்மை. அவர் பூர்ண மௌனம் பூண்ட நாட்களிலேயே இது மேலும் சக்திகரமாக இயங்குகிறது.

இதெப்படி என்பதற்கு விடை: பெரும்பாலும் மக்கள் தங்கள் ஞான சூன்யத்தை மறைக்கவே வெற்று வார்த்தை ஜோடனை என்ற முகமூடியைப் போட்டுக்



கொள்ள வேண்டியிருக்கிறது. ஸ்ரீ ஆதி சங்கரர் இதனால்தான் தத்துவ வாதங்களை 'சப்த ஜாலம் மஹாரண்யம் சித்த ப்ரமண காரணம்' — அதாவது, 'வார்த்தை மயக்கு பெருங்காடாக மண்டி அறிவைக் குழப்புகிறது' என்கிறார். சொற்செழிப்பை ஞானமென்றும், விஸ்தார விரிவுரையை ஸத்தியமென்றும் தவறாகப் புரிந்து கொள்பவர்களே வார்த்தைச் சிலம்பத்தில் களிக்கிறார்கள்; ஞானமும் சத்தியமும் பிடிபடுவது எத்தனை சிரமமானது என்றறிந்தவர்களோ மிகவும் ஜாக்கிரதையுடன் வார்த்தைகளை உபயோகிக்கிறார்கள். மற்றவர்களைப் போல் அன்றி இவர்கள் முதலில் சிந்தித்துப் பின்பே பேசுகிறார்கள். அவர்கள் தெரிவிக்க முற்படுவதன் ஸாரபூதமான பொருளை அவர்களே நன்கு சிந்தித்து விட்டதால் அது கேட்பவர்களுள் நன்கு பதிந்து விடுகிறது. ஆனால் இவ்வாறு ஒருவரிடமிருந்து இன்னொருவருக்குச் செலுத்தக் கூடியவை உணர்ச்சிகளும், எண்ணங்களுமேயாகும். ஸ்வயஞ்ஜோதியாக தன்னில் தானே உணரத் தக்கதாக உள்ள மெய்ப் பொருளை எப்படிச் சிந்தனைப் பொருளாக்கி இன்னொருவருக்குச் சொல்லால் செலுத்த முடியும்? இந்த மஹாநுபவத்தை வார்த்தைகள் தடுக்குமேயன்றி விளக்க வொண்ணாது. இதனால்தான் ஞானியரின் மௌனத்தினாலேயே அவர்களது பேரநுபவம் பிறருக்கு விநியோகிக்கப்படுகிறது. பாண்டித்தியத்தின் இடறலை அறியாத சாமானிய மாந்தர் தாங்கள் விரும்பும் தாப சாந்தியை ஸ்வாமிகளின் சாந்நித்திய மாத்திரத்திலேயே பெறுவதன் ரகஸ்யமும் இதுதான்.

அத்வைத முழுமையான இறுதி உண்மையின் தேவையறியா விசாலத்தை, இடம்—வெளி முதலிய கட்டுப்பாடுகள் அறியா அதன் இயல்பான சாந்தத்தை அவரில் மக்கள் சற்றேனும் தரிசித்து விடுகிறார்கள். அந்த ஸ்வபாவ சாந்தத்தில் அவர்களுடைய கொந்தளிப்புக்களும், ஸம்சயங்களும் தன்னால் அடங்கி மறைகின்றன.

பிறவாகப் பரிணமிக்கும் நிலையில்தான் பேச்சு பிறக்கிறது. தானாக இருக்கும் நிலையில் பேச்சுக்கு இடமில்லை. மௌனமே அதன் இயற்கை. 'மெய்ப்பொருளை அடைவதே உலகில் மிகவும் கடியமான காரியம், அதை அறிந்து விட்டதாகக் கற்பனை செய்வதோ அத்தனைக்கத்தனை சுலபமான காரியம்' என்று அழகுபடச் சொல்வார்கள். எனவேதான் புத்தரையும் இயேசுவையும் போல மெய்யாக அந்த நிலையை எய்தினவர்கள் அது பற்றிப் பிறர் கேட்டபோது ஏதும் பதில் சொல்லாமல் மௌனமாயிருந்திருக்கிறார்கள்!

நமது ஜகத்குரு அவர்கள் நம்முடைய க்ஷேமத்தை உத்தேசித்து, இனம் தெரியாத ஒரு நாட்டை ஆராய்ச்சி செய்யச் சென்றவர்களைப் போன்ற சாதகர்களுக்குப் பாதை காட்டி வழிநடத்துவதை உத்தேசித்து தமது அளப்பரும் கருணையால் மானுடச் சட்டை தாங்கி நம்மிடை வாழத் திருவுளம் பற்றியிருக்கிறார்கள். அவரது அடர்ந்த, ஆற்றல் செறிந்த மௌனத்திலேயே ஸாதகர்கள் தங்களுக்கு வழிகாட்டி எச்சரிக்கும் காந்த ஊசியின் அசைவுகளை உள்ளுணர்ச்சியால் கண்டு கொள்கிறார்கள். அவர்கள் மயக்குகளுக்கும் தப்பிதங்களுக்கும் ஆட்படக் கூடிய ஸந்தர்ப்பங்களிலெல்லாம் அது திசை திருப்பிக் காக்கிறது. எல்லாவற்றிலும் முக்கியமாக, மெய்ப் பொருளைப் பற்றிய சொந்தக் கற்பனைகளையும் பிறருடைய கற்பனைகளையுமே மெய்யென்று ஏற்றுக் கொள்ளும் போக்கிலிருந்து அவர்களைத் தப்புவிக்கிறது.

ஜீவன் முக்தராக அவர் விளங்குவதால் வாழ்க்கையின் எந்தக் கோணத்தைக் கண்டும் அஞ்சுவதில்லை. தங்களுடைய சித்தத்துக்கே அஞ்சி வாழ்பவர்களுக்கு அவர் தேவைப்படுவதால், இப்படிப்பட்டவர்கள் வாழும் நகரங்களிலும் சஞ்சரிக்கிறார், நகர வாழ்வின் சஞ்சல அலையடிப்புக்களில் சற்றும் சலனமுறுமலே! இளைப்பாற்றலில் மட்டுமின்றி உழைப்பிலும் தமது தெய்விக அமைதி குலையாமல் காக்கிறார். எப்படிப்பட்ட சூழலிலும் எத்தனை தத்தளிப்பின் மத்தியிலும் தம்முடைய உள்ளமைதி இழக்காமல் கருங்கிச் சுணங்காமல் பணியாற்றும் ஆற்றல் அவருடையது. விந்தைதான் — ஒன்றுக்கொன்று விரோதமாக இருப்பவற்றையும் ஒன்றை மற்றது இட்டு நிரப்புவதாக மாற்றும் வல்லமை அவருக்கு இருக்கிறது.

அவர் வார்த்தையால் உபதேசம் செய்வதும் உண்டு. அப்போது கேட்பவர்கள் உள்ளுணர்வால் அறிய இயலாததை தர்க்க நியாயங்களாலும் அறிவின் கருத்துக்களாலும் விளக்கும் கடினமான பணியை மேற்கொள்வார். ''சிறிய கிணற்றின் பயன் மிகுந்த வெள்ளப் பெருக்கில் இருப்பதே போல் வேதத்தின் சடங்கு, அறிவு வாதம் ஆகியனவும் பரம்பொருளை உணர்ந்த மெய்ஞ்ஞானியிடம் பெறப்படும்'' என்ற கீதா வாக்கியத்தின் உயிர் கொண்ட உதாரணமாக அவர் இருக்கிறார்.

இவை யாவற்றுக்கும் மேலாக, ஆஹா, எத்தகைய கருணை! அதன் வீச்சை அனுபவ பூர்வமாக உணர்ந்தாலே நம்ப முடியும்!

தமிழ் வடிவம்: ரா. கணபதி

''நேத்து பாங்கில் திருடியபோது ஐயாயிரத்து அறுநூறு ரூபாயை வெச்சுட்டுப் பாக்கியைத் திருடினதாகச் சொன்னியே ஏன்?''

''அந்த பாங்கில் என்னோட அக்கவுண்டில் அந்தத் தொகை இருக்கே!''

— கீழை அ. கதிர்வேல்









# ஓளங்கள்

## இனிய பாலு மகேந்திராவுக்கு...

ராத்திரி நிசப்தத்தைக்கிழித்துக்கொண்டு ஓலமிடும் கடலலைகள் நெஞ்சில் ஏற்றிவிடும் ஒரு துக்க உணர்வு, உதய காலத்துத் தூறலில் உதிர்ந்து போய், சுகந்தம் பரப்ப முடியாமல் செருப்புக் கால்களுக்குக் கீழ் மரிக்கும் மகிழ மலர்கள், நகரின் அத்தனை அழுக்கு ஆவேசங்களுக்கிடையிலும், சுற்றிலும் ஒரு மௌனத் திரையுடன் தூளியில் தொங்கலாடித் தொங்கலாடிச் செல்லும் ஒரு மழலையின்மரண ஊர்வலம் — மனத்தின் ஓரத்தில் குத்தூசி குத்தூசிகளாய்க் குத்தி நின்ற அனுபவம் உண்டு.

ஒரு அவசரமான மாலையில் கண்ட உங்களின் 'ஓளங்கள்' இப்பொழுது இன்னொரு குத்தூசி.

சற்றே விடைத்த மூக்கும், பென்சில் கோடு மீசையுமாய் ஒரு கதாநாயகன், அருகாமை வீட்டுக்காரரின் முக வாகுடன் அமோல் பலேகர், சரியான தேர்வு. ஆறு வருஷ தாம்பத்தியம் அலுக்காத குறுகுறுப்பு, அவசியத்தில் மனைவியிடம் போய் சொல்கிற நெளிவு, வகையாய்ச் சிக்கிக் கொண்டதும் வழி புரியாமல் தவிக்கிற தவிப்பு, பிள்ளையிடம் கொப்புளிக்கிற பாசத்தை மென்று மென்று தீர்க்கிற பரிதாபம் இத்தனைக்கும் வளைந்து கொடுக்கிற இயல்பான திறமை.

அவருக்கு மனைவியாய் பூர்ணிமா ஜெயராம். புதிதாய் நேற்றுத்தான் தாலி ஏறின மாதிரி ஒரு முகப் பொலிவு, கூடுகையில் காட்டும் குழைவு, பிரிகையில் காட்டும் வேதனை, ஆத்திரம் வெடிக்கிற அழுகை ஒரு சொந்த சகோதரியின் இயலாமையை பார்ப்பவர் நெஞ்சில் விதைக்கிற பாங்கு.

அப்புறம் அந்த பேபி அஞ்சு. துறுதுறு, சுறுசுறு என்று துவக்கம். ஆண்ட்டியிடம் இழைந்து கொள்கிற இனிமை, அவளின் வெறுப்புக்கு ஆளாகிறபோது துக்கம் தொண்டையைப் பிராண்ட சொந்த அப்பனையே 'சார்' என்று விளித்துத் தயங்கி நிற்கிற தோரணை, இரவு இரண்டுமணி ரயிலின் கடகடப்புக்குப் பின்னும், ஆகாய அரண்மனைக்குப் பயணித்துவிட்ட அன்னையின் படத்தை வெறித்துக் கொண்டிருந்து விட்டு ஒரு வெட்டுக் கோணத்தில் திரும்பி, 'எண்ட அம்மே' என்று உதடு துடித்து மறுபடியும் அந்த மௌன சோகத்தில்

அமிழ்கிற ஏக்கம், சின்னச் சின்ன எட்டாய் எடுத்து வைத்துக் கால் பந்து விளையாடி வெற்றி பெற்று மறுபடியும் கர்வமில்லாத சின்னச் சின்ன எட்டாய் எடுத்துவைக்கும் அலட்சியம், ஒரு பெரிய மனிதத் தோரணை யுடன் பிரியத் தயாராகிவிட்டு, பின் வளர்ப் புத் தாயின் ஒரு விளிப்பில் பெட்டியை விசிறடித்து ஓடிவந்து மடங்கும் ஆவேசம்— இந்தச் சின்னச் சிட்டுக் குருவிக்கு ராக்ஷஸ இறக்கைகள். எட்டிப் பிடித்திருக்கிற உயரம் இமய உச்சி. உங்கள் கற்பனை ராஜுவுக்கு உயிர் கொடுக்கிற அந்த ஒரு பரிகக் காவியம்.

அழகான மனைவி, ஆசையான குழந்தை, அமைதியான வாழ்க்கை என்றிருக்கிறவனுக்கு அதிர்வுகளைத் தருகிற ஒரு சூழல். நாயகனின் சொல்லப்படாத முன் கதை. அந்த முன் கதையில் அவன் பிரிந்து வந்த பெண்ணும் அவள் வயிற்றில் விதைத்து வந்த கருவும். அந்த அநாதை ஆண் குழந்தை இவனிடமே வந்து சேர மனைவியிடம் சொல்லி அமைதி யைக் கலைக்கப் பயந்து மாற்றான் குழந்தை என்று சொல்கிற பொய். அந்தப் பொய் உடைகிறபோது, ஆசை துவேஷமாய் அரை நொடியில் மாறுகிற தாக்குதல். உறவுகளின் இடையில் பின்னப்பட்ட உணர்வுகளின் சலனங்கள், அவற்றின் நிர் மாணம் கலைகிற இயல்புகள்.

ஓர் அழகான சிறு கதையைச் சுருக்க மாய்ச் சொன்ன அந்தக் காவிய நடை எங் களுக்கு மிகவும் பிடித்திருந்தது.

'பத்திரிகையாளர்கள் எதிர்மறை அணுகு முறையை மட்டுமே கையாள்கிறார்கள், ஒரு அழகான பெண்ணைக் கண் முன் நிறுத்தினால், அவளின் காலில் கறுப்பு மச்சத்தைப் பற்றி மட்டும் கவலைப்படுகிறார்கள்' என்று குற்றம் சாட்டுகிறீர்கள்.

இருந்தாலும்,

குத்திக் காட்டும் மதி மந்திரி இல்லாமல் அரசனின் ஆளுகை அமைப்பாய் இருப்ப தில்லையே!

எனவே, இந்தப் படத்தில் மனசை உறுத்திய சில நெருடல்கள்:

புருஷனைப் பிரிந்து வந்த மகளுக்கு அம்மா ரீல் ரீலாய்ப் புத்திமதி சொல்கிற இழுவை. எத்தனையோ தடவை திரையில் அலுப்பேறிவிட்ட அதே 'க்ளைமாக்ஸ்' உத்தி. காமிராவின் சௌகரியத்திற்காக ஊட்டியில் ஊட்டப்படுகிற நாயகனின் முன் கதை.

இயக்குனர் பாலுவை விட காமிரா பாலு எப்போதுமே ஒரு படி மேலே நிற்பவர்தான். காட்சிகள் இன்னும் நிழலாய் மனத்தில் படிந்திருக்கின்றன.

இயல்பு அறிந்து இசையமைக்கிற இளைய ராஜா ஒரு பக்கபலம்.

அபாயகரமான இறக்கத்தில் இடுப்பில் ஆடை நெகிழ ஆடுகிற ஆட்டங்கள் இல்லை யென்பதாலோ, படம் முழுக்க அசையும் பூக்களும், சலசலக்கும் ஓடைகளும், கலகலக் கும் பிஞ்சு முகங்களுமாய், நகரும் பனிக் கும்பல்களுமாய் இருந்து விட்டதே என்ப தாலோ இந்தப் படத்தை 'வயது வந்தவர் களுக்கு' என்று முத்திரை குத்திவிட்ட சென்ஸார் போர்டின் ஆண்மையைச் சந் தேகிக்க வேண்டியிருக்கிறது.

உங்களிடமிருந்து வித்தியாசமான வித்தை களை இன்னும் எதிர்பார்க்கிறோம்.

மீண்டும் சந்திப்போம்.

நேசத்துடன்,

-ஜெய மன்மதன்



- அமெரிக்காவில் கொலராடோ மாநிலத் திலுள்ள டென்வர் நகரில் டாக்டராக இருக்கும் திருமதி ரோஹிணி கிருஷ்ணன் அண்மையில் பெங்களூருக்கு வந்திருந்த போது கூறிய தகவல்கள்:—

- அமெரிக்காவில் அரசு ஆஸ்பத்திரி இடையாது: எல்லாம் தனியார் நிறு வனங்கள் தாம். ஒரு நாளைக்கு 125 முதல் 200 டாலர் வரை வாங்குகிறார்கள். வசதிக ளும் ஏராளம். டி. வி. முதல் டூத் பிரஷ் வரை எல்லாம் தருவார்கள்.

- இஞ்சக்ஷன் ஊசி, காத்தீட்டர், பிளாஸ்டிக் கையுறைகள் போன்றவற்றை இரண்டாவது தரம் உபயோகிக்க மாட்டார்கள். தூக்கி எறிந்து விடுவார்கள். கழிவறைகள் ஒரு மணி நேரத்துக்கு ஒரு முறை சுத்தம் செய்யப் படும்.

- 40 மைலுக்கு அப்பால் காரில் போய்க் கொண்டிருக்கும் ஒரு டாக்டரை அவசரமாக ஆஸ்பத்திரிக்கு அழைக்க வேண்டுமானால் கூட உடனே வயர்லெஸ் முறையில் கூப்பிடு கிறார்கள்.

- பல ஆஸ்பத்திரிகள் மொட்டை மாடி யில் ஹெலிகாப்டர் வந்து இறங்கலாம்! அவ சர சிகிச்சை தேவைப்படும்நோயாளிகள் ஹெலிகாப்டரில் வந்து இறங்கலாம்.

- ஆஸ்பத்திரி கட்டணம் ரொம்ப அதிக மாவதால் மெடிகல் இன்சூரன்ஸ் முறை பிரபலமாய் இருக்கிறது.

பேட்டி : அனிதா ராமச்சந்திரன்

# வளரும் குழந்தைகளுக்குத்

## தேவை ஒரு விசேட திட உணவு...

# ஃபாரெக்ஸ்



**காரணம், குழந்தைகளின் விரைந்த முழுவளர்ச்சிக்கான <u>அதிக</u> ஊட்டச்சத்துள்ள திட உணவாகும் ஃபாரெக்ஸ்.**

1. ஃபாரெக்ஸ் புரதச் சத்து நிரம்பியதாகும் —உங்கள் குழந்தையின் வளர்ச்சிக்கு இது அத்தியாவசியமாகும்.

2. ஃபாரெக்ஸ் வேறெந்த பிராண்டு செய்யப்பட்ட திட உணவைக் காட்டிலும் <u>அதிக</u> இரும்புச் சத்துள்ளதாகும். இது குழந்தைக்குத் தொற்றுநோய் எதிர்ப்புச் சக்தியையும் ஆரோக்கியமான இரத்தத்தையும் அளிக்கிறது.

3. ஃபாரெக்ஸில் கால்ஷியம் மற்றும் ஃபாஸ்ஃபரஸ் சரியான விகிதத்தில் சேர்ந்திருக்கின்றன. ஆரோக்கியமான எலும்புகளையும் திடமான பற்களையும் பெற இவை உதவுகின்றன.

4. தவிர ஃபாரெக்ஸ், குழந்தையின் மென்மையான செரிக்கும் சக்திக்கேற்றவாறு விசேஷமாக முன்கூட்டியே பக்குவம் செய்யப்பட்டதாகும்.




டாக்டர்கள் சிபாரிசு செய்வது

**ஃபாரெக்ஸ்** ®

வழங்குவோர் **க்ளாக்ஸோ**

CASGLF-42 183 TM



✖ கொக்கோழிக்கோடு சிவலிங்கம்

# சுகத்திலுறும் பயன்

ஆனந்தி

**கோ**ழிக்கோடு நகரத்தின் மத்தியில் பிரதான சாலைக்கு வெகு சமீபத்தில் ஒரு சிறு குன்றின்மீது ஒரு கிருஷ்ணன் கோயிலும் சிவபெருமான் கோயிலும் இருப்பது சட்டென்று புலப்படாது.

இந்தக் கோயில்கள் எப்போது கட்டப்பட்டன என்பதை உறுதியாகச் சொல்ல முடியவில்லை. சிவபெருமானின் கோயில் கட்டப்பட்ட பிறகு ஸ்ரீ கிருஷ்ணன் கோயில் கட்டப்பட்டிருக்கலாம்.

இந்தக் குன்றைச் சார்ந்த பிரதேசங்களை மான விக்கிரமன் என்ற ஓர் அரசர் ஆண்டு வந்தார். சமுத்திரத்துக்குக் காவலன் என்ற காரணத்தைக் கொண்டு ஸாமுத்திரி என்று அழைக்கப்பட்டார். இவருடைய காலத்திலிருந்து சிவன் கோயில் இருப்பதாகக் கூறப்படுகிறது.

பிரதான சாலையிலிருந்து திரும்பி ஒரு சந்தில் நுழைந்து இருபதடி தூரம் சென்றால் திடீரென்று ஒரு சோலைக்குள் நிற்கிறோம்.

இந்தச் சிறுகுன்றுக்குக் கொக்கோழிக்கோடு குன்று என்று பெயர். இதன் காரணமாகவே தமிழ் நாட்டில் கள்ளிக்கோட்டை என்று வழங்கும் இந்த ஊருக்குக் கோழிக்கோடு என்று பெயர் வந்ததாம்.

இந்தச் சோலையில் கற்பக விருட்சங்கள் என்று கூறப்படும் ஐந்து வகை மரங்களும் இருப்பதைப் பார்க்கலாம். எல்லாம் வானோங்கிய மரங்கள்.

மாமரங்கள் காய்த்துக் குலுங்குகின்றன. தென்னையிலோ குலை குலையாகக் காய்கள். உயரமாகவும் நேராகவும் நிற்கும் பாக்கு மரங்கள். இன்னும் பெயர் தெரியாத பல வகை மரங்கள். அவற்றில் படர்ந்துள்ள மிளகுக்கொடிகள். அடாடா! ஒரு கிளையில்லாத் தனி பலாக்காய்கள்! பெரிய பெரிய பழங்கள் கிளைகளிலிருந்து தொங்குவதைப் பார்க்கும் போது குற்றாலக் குறவஞ்சிதான் ஞாபகம் வருகிறது.

கிளைகளாய்க் கிளைத்த பல
  கொப்பெல்லாம் சதுர்வேதம்—கிளைகளீன்ற
கனையெல்லாம் சிவலிங்கம் கனியெலாம்
  சிவலிங்கம் கனிகள் ஈன்ற
சுளையெலாம் சிவலிங்கம் வித்தெலாம்
  சிவலிங்க சொரூபமாக
விளையுமொரு குறும்பலவின் முளைத்தெழுந்த
  சிவக்கொழுந்தை வேண்டுவோமே!

ஒரு மரத்தைப் பார்த்தால் கூட அதன் கிளைகளை நால் வேதமாகவும் கிளைகள், கனிகள் சுளைகள் வித்துக்கள் எல்லாவற்றையும் இறைவனாகவும் கண்ட மகான்கள் வாழ்ந்த நாடு நம்முடையது. இதைவிடச் சிறந்த பண்பாடு ஒன்று இருக்க முடியுமா?

இன்னும் இருபதடி நடந்தால் திடீரென்று சற்றுப் பள்ளம். அதில் ஒரு பெரிய குளம். சிறுவர்களும் பெரியவர்களும் துணிகளைத் தோய்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

குளத்தின் கிழக்குக் கரையில் சற்று உயரமான மேட்டில் கொடிக் கம்பம் தரிசனமாகிறது. வெள்ளிக் கிழமை மாலை நேரம். படிகளில் ஏறிச் சென்று கோபுர வாயிலில் நின்று பார்க்கும்போது தீபச் சுடர்களின் ஒளியில் மாயக் கண்ணனின் உருவம் தெரிகிறது. உள்ளே குழந்தைகள் சுலோகம் சொல்வது கேட்கிறது. ஓர் அம்மையார் சொல்லித் தருகிறார். கோவிலைச் சுற்றிப் பிரதட்சிணம் செய்தால் சுற்றுப் புறத்தின் தூய்மையும் அழகும் மனத்தைக் கவருகின்றன.

✖ கொக்கோழிக்கோடு சிவன் கோயில் முக மண்டபம் - கர்ப்பக்கிருஹம்



# தெய்வ தரிசனம்

கோவில் என்றால் பெரிய கோபுரம் இல்லை. ஓடுகள் வேய்ந்த கோபுரம்தான். அந்த எளிமையில் ஓர் அழகு குடிகொண்டிருப்பதை உணர்கிறோம். பின்புறம் ஒரு சரக் கொன்றை மரம் ஓம்கார வடிவமாகத் தன் பொன்னிற மலர்களை ஒவ்வொன்றாக உதிர்க்கிறது. கண்ண பெருமான் விளையாடிய பூமியை அது அர்ச்சனை செய்கிறதோ? அதற்குப் பின்னால் சில கூந்தல் பனைகள் தங்கள் பச்சைத் தோரணங்களைத் தொங்க விட்டு அலங்காரம் செய்திருக்கும் அழகு உள்ளத்தையே குளிர்விக்கிறது. தேங்காய் குலைகள் மாலை வெய்யிலில் பொற் குடங்களாகப் பிரகாசிக்கின்றன. கமுகு மரங்கள் சலசலவென்று சாமரம் வீசுகின்றன.

பற்பல பறவைகளின் குரல்கள் கேட்கும் போது மீராபாயின் இனிமை பொங்கும் ஒரு பஜன் ஞாபகம் வருகிறது:

''ஹரி வருகின்ற ஒலி கேட்கிறது. மண்டூகங்கள் அவன் வரவுக்குக் கட்டியம் கூறுகின்றன. மயில்களும் கிளிகளும் ஆரவாரிக்கின்றன. குயில்கள் மதுர த்வனியினால் அவனை அழைக்கின்றன. மேகங்கள் கூட பன்னீர் தெளித்து அவன் வருகையை எதிர்பார்த்து முழங்குகின்றன. மின்னல்கள் நாணத்தை விட்டு மின்னுகின்றன.''

மெல்ல பிரதட்சிணம் செய்து வரும் போது குழந்தைகள் நாராயணீயத்திலிருந்து காளிங்க நர்த்தன சுலோகத்தைப் பாடக் கேட்கிறோம்:

''நாகக்கன்னிகைகள் அளித்தமுத்து மாலைகளினாலும் வெண் பட்டினாலும் அலங்கரிக்கப்பட்ட உன்னை உன்னுடைய ஜனங்கள் கரையில் நின்று பார்த்துக் கொண்டிருக்க (ஆடுகின்றாய்).'' இது காதுகளில் விழுந்து கொண்டிருக்கும்போதே உள்ளே நுழைந்து நமஸ்கார மண்டபத்துக்கு அருகில் குழந்தையான கிருஷ்ணனைத் தரிசனம் செய்கிறோம். நின்ற திருக்கோலம். வெள்ளிக் கவசம்

⌘ சாலபுரம் ஸ்ரீ கிருஷ்ணன் கோயில் ஸ்ரீபுரம் (கர்ப்பக் கிருஹம்)





⌘ ஸ்ரீ கிருஷ்ணன்-சாலபுரம்

சாத்திக் கொண்டு திருமுக மண்டலத்தில் எழில் பொங்கும் சிரிப்புடன், கிரீட குண்டல அலங்காரங்களுடன் காட்சி தருகிறான். இடது கையை இடுப்பில் வைத்து வலது கையில் ஒரு உருண்டை வெண்ணெயை வைத்துக் கொண்டிருக்கிறான். கிருட்சிப்பூ மாலை சூடியிருப்பது பிரகாசமாகத் தெரிகிறது.

சற்று நேரத்தில் மாலை தீபாரதனையைக் காணப் பலர் வந்து கூடுகிறார்கள். அநேகமாகப் பெண்மணிகளும் குழந்தைகளும்தான். கோகுலமாகவே காட்சியளிக்கிறது.

சாலபுரம் ஸ்ரீ கிருஷ்ணனுக்குத் தீப அலங்காரம்தான் ரொம்ப விருப்பமாம். குழந்தைக் கண்ணனல்லவா? இருள் பிடிக்காது. அவனை மகிழ்விக்க வேண்டும் என்று ஆசைப்படுபவர்கள் நமஸ்கார மண்டபத்திலும் ஸ்ரீபுரத்தைச் சுற்றியும் நிறைய விளக்கேற்றி வைப்பது வழக்கமாம். ஸ்ரீபுரம் என்பது கர்ப்பக்கிருஹம்.

பூஜை செய்யும் நம்பூதிரி ஸ்ரீபுரத்துக் கதவுக்கு இருபுறமும் விளக்கு ஏற்றுகிறார். சிறிய வட்டமான ஓடு வேய்ந்த ஸ்ரீபுரம். ஆயர்பாடியில் கண்ணனும் கோபர்களும் இருந்த வீடுகள் இப்படித்தான் எளிமையாக இருந்திருக்க வேண்டும்.

வேண்டுதல் செய்து கொண்டவர் நமஸ்கார மண்டபத்தில் இருபுறமும் தொங்குகின்ற சர விளக்குகளை ஏற்றியவுடனே எல்லாப் பெண்டுகளும் குழந்தைகளும் விளக்குகளை ஏற்றுகிறார்கள். மகா லட்சுமிக்கு உகந்த வெள்ளிக் கிழமைகளில் சுமங்கலிகள் பலர் சேர்ந்து லட்சுமிகாந்தனுக்கு விளக்கேற்றி



விழாக் கொண்டாடுவது என்ன பொருத்தம்! குசேலருக்கும் சுசீலைக்கும் லட்சுமீகடாக்ஷம் பொங்கச் செய்த வள்ளல் அல்லவா? துவஜஸ்தம்பத்துக்கு அருகே உள்ள கருங்கல் அடுக்கு விளக்கையும் ஏற்றியாகி விட்டது. தீபச் சுடர்மயம். உள்ளத்தில் கூட அந்த ஒளிப் பிழம்புகள் பிரதிபலித்து இருள் விலகி விட்டது போல ஓர் ஆனந்த உணர்ச்சி உண்டாகிறது.

சாலாபுரத்துக் கண்ணனிடம் தாய்மார்கள் வாத்ஸல்ய பக்தி செலுத்துவதாகவே காண்கிறது. அவரவர்கள் கண்ணன் மீது பாடல்களைப் பாடித் துதிக்கிறார்கள்.

நம்பூதிரி சன்னிதியை மூடி நைவேத்யாதி உபசாரங்களைச் செய்து விட்டுக் கதவைத் திறந்து அலங்கார– தீபத்தை தூக்கிப் பிடிக்கிறார். ''ஹரே ராம ஹரே ராம ராம ராம ஹரே ஹரே! ஹரே கிருஷ்ண ஹரே கிருஷ்ண கிருஷ்ண கிருஷ்ண ஹரே ஹரே!'' என்று குழந்தைகள் பாடுகிறார்கள். கண்ணனுடைய திருமேனியைக் குளிர்வித்த சந்தனம் பிரசாதமாக வழங்கப்படுகிறது.

கிருஷ்ணனுக்குப் பிரியமான அவலை வெல்லம் தேங்காய் கல்கண்டு கலந்து மணக்க மணக்கப் பிரசாதமாக அளிக்கிறார்கள்.

மறுநாள் சிவபெருமானைத் தரிசிக்கும் பாக்கியம் வாய்த்தது. இது இன்னும் சற்றுப் பெரிய தளி. சோலையின் நடுவில் அமைதியாக வீற்றிருக்கிறார் ஈசன். இந்தக் கோவிலில் சிவபெருமான் தபஸ்வியானதால் சீவேலி முதலிய உற்சவங்கள் கிடையாது.

சாந்தம் தவழும் சூழ்நிலை. சிவபெருமான் தனியே இருக்கிறார். கூட்டமும் இல்லை. ஏகாந்த சேவை. பூஜை செய்யும் திருமேனி, நெல்லுப் பொரியும் வெல்லமும் பிரசாதமாகக் கொடுத்தார். அர்ச்சகரைத் திருமேனி என்று மிக பவ்யமாக மலையாளத்தில் அழைக்கிறார்கள். என்ன பொருத்தம்! நிர்மலமான ஈசனுக்கு அபிஷேகம் செய்விக்கிறார்கள். அகில உலகங்களுக்கும் அன்னையான தேவியால் கூடத் தீர்க்க முடியாத பசியைத் தீர்த்து வைக்கும் வள்ளலுக்கு அமுது படைக்கிறார்கள். திக்குகளையே ஆடையாக உடுத்தவனுக்கு திவ்ய ஆடைகளை உடுத்துகிறார்கள். முற்றும் துறந்த சித்தனுக்கு அலங்காரங்கள் செய்கிறார்கள்.

''முப்போதும் திருமேனி தீண்டுவார்க் கடியேன்'' என்று தெரியாமலா ஆரூரர் பாடினார். அதிலும் கேரள நாட்டில் உள்ள தூய்மைப் பண்பாடு இருக்கிறதே அதை மிகவும் போற்ற வேண்டும்.

ஸ்ரீபுரத்தில் லிங்கத் திருமேனியின் மீது முக்கண் சாத்தப்பட்டிருக்கிறது. ஏழு சந்திர கலைகள் ஒன்றன் மீது ஒன்றாக. அதன் மீது சிறிய நாகம். பற்பல கிளை விளக்குகள் நின்று நிதானமாக முத்துப் போல் ஒளிர்கின்றன. அந்த நிசப்தத்தையும் அமைதியையும் கலைக்க மனமில்லாதபடியால் பிரதட்சிணம் செய்யும்போது தோத்திரம் கூடச் சொல்ல நா எழும்பவில்லை. கேரளாவில் சிவன் கோவில்களில் அம்பிகை கூட இல்லாதபடியால் அர்த்தப் பிரதட்சிணம் தான் செய்ய வேண்டும். அபிஷேக நீர் ஓடும் கால்வாய் வரை வலம் வந்து திரும்பி மறுபடியும் அந்த இடம் வரும் வரை இடது புறமாக நடந்து ஒரு சுற்று முடிக்க வேண்டும். அபிஷேக நீரைத் தாண்டுவது மரியாதை அல்ல என்பதால் வந்த வழக்கமாக இருக்கலாம்.

கோவில் வாசலில் நந்திகேச்வரர் தலையைத் தூக்கிப் பார்த்துக் கொண்டிருக்கிறார். அரச இலையைப் போன்ற வடிவமுள்ள இலைகளையுடைய ஓர் ஆலமரம். அதில் பின்னிக் கொண்டு ஒரு கொன்றை மரம். பசுமையும் குளுமையும் சேர்ந்து.

கோடையிலே இளைப்பாற்றிக் கொள்ளும்
வகை கிடைத்த குளிர் தருவே
தருநிழலே நிழல் கனிந்த கனியே
. . . . . .
மேடையிலே வீசுகின்ற மெல்லிய பூங்காற்றே
மென்காற்றில் வரு சுகமே
சுகத்திலுறும் பயனே!

என்ற வரிகள் நினைவுக்கு வர, ''சுகத்திலுறும் பயன்'' இந்த இடத்தில் இறைவனை வழிபடுவதுதான் என்ற முடிவுக்கு வருகிறோம்.

சைவ வைஷ்ணவ சாக்த பேதங்களில்லாத நாடு கேரளம். ஷண்மத ஸ்தாபகர் அவதரித்த நாடல்லவா?

புகைப்படங்கள்: முகுந்த் பத்மநாபன்

# அந்தி சந்தோஷங்கள்



## வைரமுத்து பக்கம்

சில மாதங்களாகவே அவர்களை நான் தூரத்திலிருந்தே துப்பறிந்து வருகிறேன்.

அவர்கள் சந்தித்துக் கொள்வது அவர்களை விட எனக்குத்தான் ருசியாக இருக்கிறது.

அந்தப் பூங்காவில் இலைகளிலும் தளிர்களிலும் மஞ்சள் வெளிச்சம் வழியத் தொடங்கும்போது அவர்கள் வந்து சேருகிறார்கள்.

அவர்களுக்குரிய பெஞ்சில் அவர்களைத் தவிர ஒரு பறவை கூட உட்காருவதில்லை.

ஓ! அவர்களின் சிநேகம் பூமியைத் தொடாத மழைத் துளியைப் போல் சுத்தமானது.

அவர்களின் எண்ணிக்கை எட்டிலிருந்து பத்துக்குள்.

அவர்களின் சராசரி வயது எழுபதிலிருந்து எண்பதுக்குள்.

ஒவ்வொருவர் கண்களிலும் வயதான வளையங்கள்.

கழுவி வைத்த தும்பைப் பூவைப் போல மொத்தமாய் வெளுத்திருக்கும் சுத்த நரைகள்.

ஒவ்வொருவர் கையிலும் மூன்றாவது-காலாய் முளைத்திருக்கும் கைத்தடி.

சொல்லிலும் தள்ளாட்டம்!

அவர்களின் வார்த்தைகளுக்கும் வயதாகி விட்டதல்லவா?

சிமெண்ட் பெஞ்சுகளில் அவர்கள் ஒருவரை ஒருவர் உரசிக் கொண்டு உட்கார்ந்திருக்கும் அந்தக் காட்சி நெருக்கமாய்த் தொடுக்கப் பட்ட மதுரை மல்லிகைகளைப் பார்ப்பது போல் இருக்கிறது.

அவர்களின் முகங்களில் எத்தனை அனுபவ முத்திரைகள்!

அவர்களை நான் தூரத்திருந்தே நேசிக்கிறேன்.

ஓ! உயிரோடு இருக்கும் இறந்த காலங்கள் அல்லவா அவர்கள்?

ஒவ்வோர் அந்தியிலும் அந்த அஸ்தமனச் சூரியன்கள் இந்த வானத்தின் கீழே வந்து கூடுகின்றன.

அரிதாய்ச் சிரிக்கிறார்கள் அவர்கள்.

அதிகம் பேசுகிறார்கள்.

வானத்தைப் பார்த்துக் கொண்டே முணுமுணுக்கிறார்கள்.

அவர்கள் கூடுவது எதன் பொருட்டு?

அவர்களின் பேசுபொருள் யாது?

அவர்கள் மாலை வேளையில் பேசுவது வாழ்க்கையைப் பற்றியோ? இல்லை — வாழ்க்கைதானே அவர்களைப் பேசிக் கொண்டிருக்கிறது.

பிறகென்ன? மரணம் பற்றியோ? இல்லை வாலிபனே! இல்லவே இல்லை.

ஓர் இளைஞன் மரணத்தைப் பேசும் அளவுக்கு ஒரு முதியவன் மரணத்தைப் பேசுவதில்லை.

மரணத்தை அவர்கள் வீட்டுக்கு வந்து கொண்டிருக்கும் விருந்தாளியாகவே விரும்புகிறார்கள்.

முதுமை — மரணத்தை உபசரிப்பதற்கு ஒத்திகை பார்த்துக் கொண்டிருக்கிறது.

இப்போது அவர்கள் சுமையாக நினைப்பது உடம்பைத்தானே தவிர மரணத்தை அல்ல.

தங்களுக்கு அந்நியமில்லாத ஒன்றைப் பேசுவதில் அவர்களுக்கு ஆசையில்லை.

வேறென்ன பேசுவார்கள்?

''தங்களின் பழைய பள்ளிக்கூடத்து வாத்தியார்களின் கண்டிப்பு.''

''முதன் முதலில் வாங்கிய பேனாவின் விலை''

''கர்நாடக சங்கீதத்தின் மேன்மை''

''நேற்று தண்ணீர் பிடிக்க வீட்டில் பட்ட பாடு.''

''தியாகராஜ பாகவதரின் ஜவ்வாதுப் பொட்டு.''

''பழைய சீரகச் சம்பாவின் ருசி.''

''டி. ஆர். ராஜகுமாரியின் உதடு.''

''சுக்குக் கசாயத்தின் கறுகறுப்பு.''

இவைகளெல்லாம்தான் அவர்களின் பேசு பொருளாக இருக்கக் கூடும்.

அவர்கள் சுகவாசிகள்.

இந்த முதுமையை வாழ்க்கையின் உதிரி நாட்கள் என்றே உணர்ந்து வைத்திருக்கிறார்கள்.

அவர்களின் சுதந்திரமான ஏகாந்தத்தில் சுவை இருக்கிறது.

அந்த அந்தியில் அவர்களின் சந்தோஷ சபை கூடிய பிறகு, வராத ஒருவருக்காகச் சந்தேகத்தோடு வருத்தப்படுகிறார்களே— அப்போது அவர்களின் மனிதாபிமானத்தைத் தரிசிக்க முடிகிறது.

சபை கலையும்போது ''நாளை பார்க்கலாம்'' என்று விடை பெறுகிறார்களே அப்போது அவர்களின் நம்பிக்கையைத் தரிசிக்க முடிகிறது.

ஓ! சில மாதங்களாகவே அவர்களை நான் தூரத்திலிருந்தே துப்பறிந்து வருகிறேன்.

புகைப்படம்: உத்ரா

# நல்ல உடல்
# நீங்கள் நம்பலாம்.



# ஆரோக்கியத்துக்கு

அம்மாக்களுக்கும் அப்பாக்களுக்கும் குழந்தைகளுக்கும் பாட்டிகளுக்கும் ஹார்லிக்ஸ் அனைவருக்கும் நல்லது. ஏனெனில் ஹார்லிக்ஸ் ஒவ்வொரு நாளும் நல்ல உடல் ஆரோக்கியத்தை அளிக்கிறது.

அதனால்தான் லட்சக்கணக்கான மக்கள் 100 ஆண்டுகளுக்கு மேலாக ஹார்லிக்ஸின் நற்பயனில் நம்பிக்கை வைத்து வருகிறார்கள்.

உலகெங்கிலுமுள்ள டாக்டர்கள் உடல் ஆரோக்கியத்துக்கு உகந்த உத்தாரவாதமென்று சிபாரிசு செய்கிறார்கள்.

அதனால் ஆச்சரியமில்லை. ஹார்லிக்ஸின் சத்துள்ள, சுத்தமான பொருள்கள் சிறப்பானதொரு முறையில் ஒன்றிணைந்து அவற்றின் நற்பயனும் எளிதாக சீரணிக்கும் இயல்பும் நீடிக்கின்றன.

ஹார்லிக்ஸை உங்கள் குடும்ப வாழ்க்கையின் ஓர் இன்றியமையாத அம்சமாக்கிக் கொள்ளுங்கள். அதன் நற்பயனில் நீங்கள் நம்பிக்கை வைக்கலாம்.




HTD-HMM-7145T

## முழுமையான ஊட்டம் பெற

# முதல் போணி

## விஜயா வரதன்

ஒரு வாரமாக வியாபாரமே ஆகாமல் பைத்தியம் பிடித்தது போல் இருந்தது அஞ்சலைக்கு. பஸ் ஸ்டாப்பைப் பார்த்துத் தெருக் கோடியில் காத்துக் கொண்டு உட்கார்ந்திருந்ததுதான் மிச்சம். இன்றும் நாலு முழம் பூக்கூட விற்கவில்லை. மாலை நாலு மணிக்கே இதழ் விரியத் தொடங்கியிருந்த பூ ஏழு மணிக்கு முழுவதும் மலர்ந்து, குப்பென்று வாசனை தெருவெங்கும் பரவ ஆரம்பித்தது.

மல்லிகைப்பூ... ஜாதிப்பூ....'' கத்திக் கத்தித் தொண்டை வலித்ததுதான் மிச்சம்.

முதன் முதலாக அன்று போணி பண்ணின அம்மாவை நினைத்து முணு முணுத்துத் திட்டிக் கொண்டாள். விலை போகாமல் தங்கிவிட்ட பூவை மறுநாள் காலையிலே அரை விலைக்கு விற்க வேண்டும்! இன்னும் எத்தனை நாளைக்கு இந்தக் கஷ்டமோ...!'

நாலைந்து நாட்களுக்குள் அவள் கஷ்டம் விடிந்து விட்டது. ஊருக்குப் போயிருந்த அவள் வாடிக்கை அம்மா வந்துவிட்டாள். அஞ்சலைக்கு அந்த அம்மா வந்தது சொந்தத் தாயைப் பார்ப்பது போல ஒரே மகிழ்ச்சியாயிருந்தது. ஸ்பெஷலாக நெருக்கம் நெருக்கமாகப் பூவைக் கட்டிக் கொடுத்துவிட்டு, அந்தம்மா கையால் காசை வாங்கியதும் புதையல் கிடைத்தது போல் இருந்தது அவளுக்கு.

கையில் வாங்கிய காசைக் கண்ணில் ஒற்றிக் கொண்டு, கையை நெரித்துக் கூடையைச் சுற்றிக் காசைக் கூடைக்குள் போட்டுவிட்டு நடையைக் கட்டுகிறாள் அஞ்சலை.

முதல் போணி... அந்தம்மா தொட்ட வேளை பூவை எடுத்துக் கொண்டு வாடிக்கைக் காரர்கள் வீட்டில் கொடுத்துவிட்டுத் தெருவில் உட்கார்ந்ததுமே எல்லாப் பூவும் ஏழு மணிக்குள்ளாக விற்றுப் போய்... அவள் தலையில் செருகிக்கொள்ள ஒரு கண்ணி பூக்கூட மிஞ்சவில்லை.

'என்னம்மா... இவ்வளவு சீக்கிரம்... வெள்ளனை வீட்டுக்கு வந்துட்டியே...!' கேள்வி கேட்டு நிற்கும் பையனைப் பார்த்து அர்த்தத்தோடு சிரித்தாள் அவள். பூ விற்ற காசில் வாங்கி வந்திருந்த கறி காயையும், அரிசியையும் துணி முடிச்சைப் பிரித்துப் பாத்திரத்தில் கொட்டினாள்.

''மவராசி கைராசி... அந்தக் கோடி வீட்டம்மா கையிலே என்னமகிமைஇருக்குதோ... பதினைஞ்சு வருஷமா நானும் பாக்கறேன்... அதுங் கைபட்டா வியாபாரம் நிமிசமா ஆயிடுது!''



குடித்துவிட்டுச் சாப்டாட்டை ஒரு கை பார்க்கும் அவள் புருஷனும் ''ஆமாம்... ஆமாம்....'' என்று பாதிக் கலக்கத்தோடு பதில் சொல்கிறான்.

பூ விற்காத நாட்களில் காய்கறி வாங்கிக் கூடையை நிரப்பிக் கொண்டு வீடு வீடாக வியாபாரம் செய்வாள் அஞ்சலை.

''ஏ அஞ்சலை, நான் காய்கறிக் கூடையை முதல்ல தொட்டா என்னவாம்... அம்மா, அம்மான்னு பெரிசாக் கத்தறியே... இன்னிக்கு நான்தான் முதல் போணி பாரேன்!'' அந்தம்மாவின் மருமகள் என்ன சண்டை பிடித்தாலும் ''முதல் முதல்லே பெரியம்மா தான் கை வைக்கணும்...., நான் ரொம்பவும் கஜுர் பேர்வழி...! நீ சின்னப் பொண்ணு... போ அந்தப் பக்கம்!'' மருமகளோடு மல்லுக்கு நின்று நாழிகை காத்திருந்தாவது வீட்டுப் பெரியம்மா வந்து காசு கொடுத்தால்தான் கிளம்புவாள்.

அஞ்சலையின் பெண்ணை ஆஸ்பத்திரியில் சேர்த்து இருப்பதாக மருமகனிடமிருந்து கடிதம் வந்ததும், விழுந்தடித்து ஓடினாள். அவள் போய் மகள் முகத்தைப் பார்த்ததோடு சரி... பச்சைக் கிளி போல பொண்ணு ஒரு நிமிஷத்திலே போய் விட்டாள். பதினாறு நாள் இருந்து விட்டு ஒரு வயதுப் பேரக் குழந்தையுடன் திரும்பும்படி ஆயிற்று.

மகளைப் பறி கொடுத்து விட்டு வந்ததிலிருந்து எந்த வேலையும் செய்யப் பிடிக்காமலிருந்தது அஞ்சலைக்கு.

பேரக் குழந்தை பசியால் வீறிட்டது.

யம்மால்.... யம்மால்...!'' பையனின் பசி நச்சரிப்பு வேறே...

• தப்பா... குழந்தைக்கு கஞ்சி கொடுத்துட்டேன். உனக்கு பன்னும் டீயும் வாங்கி வச்சிருக்கேன். குழந்தையை அழ விடாமப் பார்த்துக்கோ... நான் போயி மார்க்கெட்ல பூ வாங்கியாந்துடறேன்''

''நீ போ ஆத்தா... நான் பாத்துக்கறேன்!''



மனத்தில் ஆயிரம் வேதனை இருந்தாலும் காசு வேண்டுமே...

வாங்கி வந்திருந்த பூவை இயந்திர கதியில் அவள் கை மளமளவென்று தொடுத்து முடித்தது.

'இருபது நாளுக்கு மேலாச்சு... அம்மா கையால போணி பண்ணி...' வாய்க்குள் முனகிக் கொண்டே நடந்தாள் அவள்.

தெருவில் இறங்கியதுமே எதிரில் வந்த முதல் வீட்டம்மாள் முகமெல்லாம் மலர, ''ஏ.... அஞ்சலை... சீக்கிரம் நாலு முழம் பூ கொடு.... ஆடி வெள்ளிக் கிழமை...! உன்னை ரொம்ப நாளாக் காணோமே...!'' கையில் காசை நீட்டும் அந்த மாமியிடம்...

''இதோ ஒரு நொடிலே வந்துடறேன். கோடி வீட்டம்மா என்னைக் காணும தவிச்சுக்கிட்டு இருப்பாங்க.... வீட்டுக்குப் போங்க... சீக்கிரம் அவங்களுக்குக் கொடுத்துட்டு ஓடியாந்துடறேன்...!''

அவசர அவசரமாக நடக்கும் அஞ்சலையைத் தடுத்து நிறுத்தினாள் அவள்.

''இதோ பார்... அஞ்சலை... அந்தம்மாவுக்கு இனிமே பூ அவசியமில்லே... அந்த ஐயா போய் அவங்க வீட்டிலே விசேஷம் நடக்குது... போயும் போயும் அந்தம்மா கிட்டே பூ பேரம் பண்ணாதே...!'' முதல் வீட்டம்மா சொல்லும் வார்த்தைகள் காற்றில் கரைந்து அஞ்சலையின் காதுகளில் விழுந்தன.

''ஐயோ பாவம்... மகாலட்சுமி கணக்கா பச்சப் பசுன்னு இருப்பாங்க,.. அவங்களுக்கு இப்படியொரு கதியா...!''

கோடி வீட்டு வாசலில் யார் யாரோ உள்ளே போவதும் வருவதுமாக இருந்தார்கள்.

''இன்னிக்கு சுபஸ்வீகரண விசேஷம்... ரொம்ப நாளைக்கப்புறம் பூ கொண்டு வந்

ஹரேஷ்புட்டா என்னும் 33 வயதான இன்ஷ்யூரன்ஸ் அதிகாரி மகாராஷ்டிரத்தில் இரத்த தானம் அளித்தவர்களில் முதல் ஸ்தானம் வகிக்கிறார். இவர் நூறு தடவை இரத்த தானம் செய்துள்ளார். இதைப் பாராட்ட மகாராஷ்டிர கவர்னர் இவருக்கு மோதிரம் பரிசாக அளித்தார்.

—தனலட்சுமி



திருக்கே... எல்லோருக்கும் பூ கிள்ளிக் கொடுக்கணும்... சீக்கிரம் பதினைஞ்சு முழம் பூ அளந்து கொடு....!'' அவசரப்படுத்தினாள் அந்த வீட்டு மருமகள்.

''யம்மாவ்... அம்மா எங்க இருக்காங்க நான் அவங்களைப் பாக்கணுமே...!''

முகவாயைத் தோள் பட்டையில் இடித்துக்கொண்டாள் மருமகள்.

''நன்னாத்தான் இருக்கு போ.. அவங்க இப்ப எப்படி வெளில வருவாங்க? அவங்க இனிமே பூ வாங்கலாமா!'' மெல்லிய குரலில் கிசுகிசுத்தாள் அவள்.

அஞ்சலை அந்த இடத்தை விட்டு அசைவதாக இல்லை.

சற்று தூரத்தில் வரும் ஒரு பெண்ணிடம் ''பாப்பா பெரியம்மாவைச் சந்து பக்கமா கூட்டிவா... அஞ்சலை பார்க்கணும்னு சொன்னான்னு சொல்லு...!''

அழுத கண்களும், கலைந்த கேசமுமாகத் தள்ளாடி வரும் பெரியம்மாவைக் கண்டதும் அஞ்சலைக்குத் துக்கம் தாங்கவில்லை. வயசான காலத்திலே யார் முந்திக்கிறாங்களோ அந்தம்மா என்ன செய்வாங்க? மனசுக்குள் நினைத்துக் கொண்டாள் அவள்.

''உங்க மருமக கேட்ட பூ பதினைஞ்சு முழம் அளந்து தாரேன்... முதல்லே உங்க கையாலே போணி பண்ணுங்க!''

உறவுக்கார அம்மா ஒருத்தி காலையில் அழுதது ஞாபகத்திற்கு வருகிறது எஜமானி அம்மாளுக்கு.

''இந்த வயசுல பொட்டு, பூ தொடக் கூடாத பாவியாகி விட்டியே... நல்ல விசேஷம்னு எதிரில் வரக் கூடாத பாவியாகிட்டியே....!''

அந்தச் சொற்கள் அவள் காதுகளில் இன்னும் ரீங்காரமிட்டுக் கொண்டிருந்தன.

''ஏ அஞ்சலை... நான் இனிமே உன்னோட பூவைத் தொடக் கூடாதுடி... நான் மங்கலத்த இழந்த பாவிடீ...!'' கண்ணீர் பளபளக்கக் கூறும் அவள் வார்த்தையை லட்சியம் செய்யாமல், பூவை அவள் கையில் கொடுக்கிறாள் அஞ்சலை... கூச்சத்தோடு கையைக் குறுக்கிக் கொண்டு வாங்கிக்கொள்கிறாள் எஜமானியம்மாள்.

''நீ நிறைஞ்சு வாழ்ந்தவ அம்மா... எப்பவும் போலவே எனக்கு உங்கையாலேதான் போணி பண்ணணும். நீ தொட்டுக் கொடுத்த பூவைத்தான் விக்கப் போகிறேன்.... உம்.... சீக்கிரம் பூக்கூடையை ஒங் கையாலேயே தூக்கி விட்டுட்டுக் காசை கொடம்மா!'' அஞ்சலையை அதற்கு மேல் அதட்டிச் சொல்லத் தெரியவில்லை அவளுக்கு.

புடவை முடிச்சை அவிழ்த்துக் காசை அஞ்சலையிடம் நீட்டுகிறாள் அம்மா... வழக்கம் போல் கையை நெறித்துப் பூக்கூடைக்கு திருஷ்டி சுற்றி விட்டு, அந்தம்மாவின் உதவியோடு பூக்கூடையைத் தலையில் ஏற்றிக் கொண்டு நடந்து செல்லும் அஞ்சலையை வியப்போடு எட்டிப் பார்த்தார்கள் அந்த வீட்டு விசேஷத்துக்கு வந்திருக்கும் உறவுக்காரர்கள்.

# 19

தாராவின் முகத்தைப் பார்க்க வேடிக்கையாக இருந்தது. கோபத்திலும் எத்தனை அழகாயிருக்கிறாள் இவள் என்கிற உணர்வில் அவன் லேசாகச் சிரித்தான்.

''சிரிக்காதே!'' என்று அவள் சீறினாள். ''உனக்கு வேறு வேலை இருக்கும்போது நான் எதுக்குப் பாட்டுக் கச்சேரி கேட்க உட்காரணும்? எனக்குப் புரியல்லே! சாஸ்திரீய சங்கீதத்திலே எனக்கு நாட்டமில்லை. ஏதோ சோம்பேறி முட்டாள் பூர்ஷுவா கூட்டத்திலே நான் ஏன்....!''

டெலிபோன் அடித்தது. அவள் ஆபீஸ் ஃபைலின் எதிரில் உட்கார்ந்திருந்ததால் அவள் தனது சுபாவ அவசரத்துடன் விரைந்தாள். உற்சாகமற்ற குரலில்,

''ஓ. ஹல்லோ மிஸ்டர் லோபோ!'' என்றாள்.

அவன் புதிய சுவாரஸ்யத்துடன் அவளைக் கவனித்தான்.

''ஸாரி மிஸ்டர் லோபோ. கார்த்திக் இல்லாமல் எனக்குக் கச்சேரி ரசிக்காது.... அப்படியானால் நான் கார்த்திக்குடனேயே கிளம்பி விடுகிறேனே?... இல்லை. இது பத்தாம் பசலித்தனம் இல்லை. என்னை உங்களுக்குத் தெரியாது...''

அவள் சற்று நேரம் ஏதும் பதில் சொல்லாமல் லோபோ பேசுவதைக் கேட்டுக் கொண்டிருந்தாள். பிறகு கார்த்திக் பக்கம் திரும்பி உதட்டைப் பிதுக்கித் தோளைக் குலுக்கினாள்.

''ஓ.கே, மிஸ்டர் லோபோ வருகிறோம்.''

அவள் டக்கென்று ரிசீவரைக் கீழே வைத்துவிட்டுச் சீற்றம் குறையாமல் திரும்பி வரும்போது அவனுக்குச் சிரிப்புப் பொத்துக் கொண்டு வந்தது.

''ஹி இஸ் எ பிக் ஹெடட் ஃபூல்! சொன்னதையே திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டிருக்கார். அவரே கொண்டு வந்து விட்டுடுறாராம். நான் வரலேன்னா ரொம்ப ஏமாத்தமா இருக்குமாம். அர்த்தமே இல்லாத இந்த மாதிரிப் பேச்சு எனக்குப் பிடிக்காது. உனக்காகத்தான் நான் ஒப்புத்துண்டேன், கார்த்திக். அவர் உன்னுடைய 'பாஸ்' என்கிற காரணத்தாலே!''

''தாங்க்யூ!''

அற்ப விஷயத்துக்கு அவள் மகா பிகு பண்ணிக் கொள்வதாக அவனுக்குப் பட்டது. நல்ல வேளையாக அவள் மறுபடி வாக்குவாதம் ஏதும் செய்யாமல் மாலையில் எளிமையாகப் புடவை உடுத்திக் கொண்டு பதவிசாக அவனுடன் கிளம்பினாள்.



லோபோவின் வீட்டு டிராயிங் ரூம் இன்று உருவம் மாறியிருந்தது. சோபாக்கள் அகற்றப்பட்டு 'லக்னௌ' ஸ்டைலில் வெல்வெட் திண்டுகளும் வெள்ளை மஸ்லின் திரைச் சீலைகளுமாய் ஆளை மயக்கிற்று. லோபோவே உருவம் மாறியிருந்தார். சூடிதார் குர்தா அந்த உடம்பின் சிகப்பிற்கும் ப்ரௌன் நிறக் கண்களுக்கும் மிக எடுப்பாக இருந்தது.

தாராவின் பார்வையிலும் அதரங்களிலும் குறும்பு பளிச்சிடுவதைக் கார்த்திக் கவனித்தான்.

''உங்களைப் பார்த்தால் நீங்களே பாட ஆரம்பித்து விடுவீர்களோ என்று எனக்குப் பயமாயிருக்கிறது மிஸ்டர் லோபோ!''

லோபோ பலமாகச் சிரித்தார். ''எனக்குப் பாட வராது. பயப்படாதே. ஐ பிலீவ் இன் டூயிங் எவ்ரிதிங் இன் ஸ்டைல்!''

தாரா அவன் விலாவில் இடித்து ''ஃப்ராட்!'' என்றாள் மெல்லிய குரலில். இவள் ஏதாவது வாக்கு வாதம் ஆரம்பித்து அவனைச் சங்கடத்தில் மாட்டி விடுவாளோ என்று அவனுள் ஒரு தயக்கம் ஏற்பட்டது. இன்றைக்கு அலுவலகக் கும்பலைக் காணோம். வெளிப் பேர் யார் யாரோ பதினைந்து பேர்கள் வந்திருந்தார்கள்.

''யதார்த்த உலகத்தைப் பற்றிய பிரக்ஞையே இல்லாத சோம்பேறிக் கூட்டம் இது.''

''கொஞ்ச நேரம் அந்த உலகத்தை மறந்து பாட்டைக் கேளு!''

ஸ்ரோத் வாசித்த வித்வான் ராஜகுமாரனைப் போல் இருந்தான். யமன் கல்யாணியை அவன் வாசித்த லாகவத்தில் தாரா கார்த்திக்கிடம் மெல்லக் கிசுகிசுத்தாள்.

''உன்னைப் பார்க்கிறதுக்கு முன்னாடி அவனைப் பார்த்திருந்தா அவனைத்தான் கல்யாணம் பண்ணிண்டிருப்பேன்!''

''அவன் தப்பிச்சான்!''

ஏர்போர்ட்டுக்கு நேரமாகிவிட்டது என்று அவன் கிளம்புகிற சமயத்தில் தாரா சங்கீதத்தில் ஒன்றிப் போயிருந்தாள். புன்னகையுடன் அவனைப்பார்த்து ''நான் வந்து சேர்ந்துடறேன். கவலைப்படாதே'' என்றாள்.

''கச்சேரி முடிந்து சாப்பாடானதும் நான் கொண்டு விடறேன் நீ கிளம்பு கார்த்திக்'' என்று லோபோ சொன்னபோது தாராவின் முகத்தில் தெரிந்த திகைப்பையும் மறுப்பையும் ரசித்தபடி அவன் கிளம்பினான்.

கொஞ்சம் கொஞ்சமாக அவள் மாறிவிடுவாள் என்று அவன் தனக்குள் சொல்லிக் கொண்டான். எல்லாரையும் வசீகரிக்கும் இயல்புடைய அவள் எல்லோருடனும் சரளமாகப் பழகினால் எத்தனை நன்றாக இருக்கும்! அவனுடைய சமூக அந்தஸ்து எத்தனை உயர்ந்து போகும்! திடீரென்று தாராவின் அம்மாவின் ஞாபகம் வந்தது. –பொட்டில் அறைந்த மாதிரி.

''மிஸஸ் கிருஷ்ணமூர்த்தி ஒரு பெரிய 'கோ கெட்டர்!' ''

லோபோவின் வார்த்தைகள் இப்போது நினைவுக்கு வருகையில் மனசு ஒரு முறை குலுங்கிற்று. நேற்று பார்ட்டியில் அவனே கண்கூடாகக் கண்டது அடிவயிற்றில் ஒரு சங்கடத்தை ஏற்படுத்தியது.

''கோ கெட்டர்!''

அந்த மாதிரி வலியச் சென்று கொண்டு வருவதை வைத்து எழுப்பும் அந்தஸ்து எப்

படி இருக்கும்? சலவைக் கல்லும் ரத்தினக் கம்பளமுமாய் ஜொலிக்கும், பாமரத் தனத்தைப் புரிந்து கொள்ள முடியாத உயரத்துக்கு எழும்பி....

''எங்களால் எங்கள் குழந்தையைப் புரிந்து கொள்ள முடியவில்லை'' என்கிற ஆயாசத் தனிமையில் புழுங்கும்... ஆனால் அந்த உயரத்திலும் தனிமையிலும் ஒரு போதை இருக்க வேண்டும். இல்லாவிட்டால் அதை விடாப் பிடியாக அது பிடித்துக் கொண்டிருக்காது...

''அது ஒரு வகை வேசித்தனம்!'' அந்த சாம்ராஜ்யத்திலேயே வளர்ந்த குழந்தைக்கு அதன் பொத்தல்களும் வண்டவாளங்களும் நன்றாகவே புரிந்திருக்க வேண்டும். இல்லாவிட்டால் அதன் வார்த்தைகளில் அத்தனை ஆக்ரோஷம் இருக்காது. அங்கிருந்து பிய்த்துக்கொண்டு ரொம்பத் துடித்திருக்காது...

ஈரோட்டில் ஒரு பிரபல வங்கியில் பணியாற்றிக் கொண்டே கவியரசு கண்ணதாசன் எழுதிய நூல்களை ஆராய்ந்து எம். ஜி. ஆர். அவர்களிடம் ''கண்ணதாச தாசன்'' என்ற சிறப்புப் பட்டத்தை வாங்க இருக்கிறார் ஈரோடு கவிஞர் மரிய விசுவாசம். கவியரசு கண்ணதாசன் நூல்களை ஆராய்ந்து பட்டம் வாங்குவது தமிழ் நாட்டில் இதுவே முதல் முறை.

மதுரை எஸ். மூர்த்தி



''வேஷம் போடறவாளைப் பார்த்து எனக்கு அலுத்துப் போச்சு கார்த்திக்! வேஷம் போடறதிலேதான் அவாளுக்கு அதிக கவனம் இருக்கே தவிர பிரியம் வைக்கிறதிலே இல்லே!''

இப்பொழுது நேற்றைய அவனுடைய அனுபவத்துக்குப் பிறகு யோசித்துப் பார்க்கும்போது தாராவின் துக்கம் மிக ஆழமான ஆர்த்தமார்த்த துக்கம் என்று தோன்றிற்று.

மிஸஸ் கிருஷ்ணமூர்த்தியைப் போல் தாரா நடந்து கொண்டால் தன்னால் அதை ஜீரணித்துக் கொள்ள முடியுமா என்று அவன் ஒரே ஒரு விநாடி யோசித்துப் பார்த்து உடனடியாகத் தன்னைச் சமாளித்துக் கொண்டான்.

தாரா ஒரு நாளும் அப்படி நடந்து கொள்ள மாட்டாள். கேள்விக்கே இடமில்லை. அவள் மூலம் உயர வேண்டிய நிர்ப்பந்தமோ வெறியோ, பேடித்தனமோ எனக்கு இல்லை!....

அவன் விமான நிலையத்துக்கு விரைந்து அரை மணி நேரம் தாமதமாக வந்து சேர்ந்த விமானத்துக்காகக் காத்திருந்து டி. ஜி.யை வரவேற்று அவரை அசோக் ஹோட்டலில் இறக்கி மறுநாளைக்கு விவாதிக்க வேண்டிய விஷயத்தைப் பற்றிப் பேசி வீட்டுக்கு வந்து சேரும்போது மணி பன்னிரண்டு. தாரா இன்னும் வீட்டுக்கு வந்து சேரவில்லை என்பது ஆச்சரியமாயிருந்தது. கச்சேரி சீக்கிரம் முடிந்து விடும் என்று லோபோ சொன்னது ஞாபகத்துக்கு வர அவன் அவசரமாக லோபோவின் டெலிபோன் நம்பரைச் சுழற்றினான். மறுமுனை செத்துக் கிடந்தது. அரை மணி நேரம் முயன்று பிறகு சோர்ந்து அவன் உடையை மாற்றிக் கொண்டு படுத்தான். காரணம் புரியாமல் நமைச்சல் ஏற்பட்டது.

அவளுக்கு இஷ்டமே இல்லாதபோது லோபோவின் அழைப்பை ஏற்றுக் கொண்டிருக்கக் கூடாது...

அவன் தன்னைச் சமாளித்துக் கொள்ள முயன்றான். கச்சேரி சுவாரஸ்யமாக நீண்டிருக்க வேண்டும். அதற்குப் பிறகு சாப்பாடு... அரட்டை என்று நேரம் போவது தெரியாமல் போயிருக்கும். வீட்டிற்குத் திரும்பியதும் தாரா நன்றாகச் சண்டை போடப் போகிறாள்...

ஓ, இன்றைக்கு அவளை அனுப்பியிருக்கக் கூடாது. வேறு யாராவது அழைத்திருந்தால் ஒத்துக் கொண்டிருக்க வேண்டாம். ஆனால் அழைத்தது லோபோ — டி. ஜி.யின் நாற்காலியில் ஒரு நாளைக்கு அமரப் போகிறவர்.

பலவித அனுமானங்களும் சமாதானங்களுமாய் அவன் புரண்டு கொண்டிருக்கையில் வாசலில் வண்டி நிற்கும் ஓசை கேட்டது. அவன் அவசரமாக எழுந்து பார்த்தான்.

ஒரு டாக்சி நின்றது. தாரா பணத்தைக் கொடுத்து விட்டு வீட்டை நோக்கி நடந்தாள்.

அவன் கதவைத் திறந்து, ''தனியாவா வந்தே? லோபோ கொண்டு விடறேன்னாரே?'' என்றான் வியப்புடன்.

''கார் டிரைவ் பண்ற நிலையிலே உங்க லோபோ இருக்கல்லே.''

அவனுக்கு சுறுசுறுவென்று கோபம்வந்தது.

''மை காட்! அர்த்த ராத்திரியிலே டாக்சியிலே வந்திருக்கே! வேற யாரும் இருக்கல்லியா? உன்னை ட்ராப் பண்ண?''

அவள் அவனை நேரடியாகப் பார்க்காமல் பேசியபடியே குளியலறைக்குச் சென்றாள் உடையை மாற்றிக் கொள்ள.

''சுய காரியக் கும்பல்னு அது? அடுத்தவனைப்பற்றி யோசிக்கத் தெரியுமா அதுக்கு.

எல்லாரும் கிளம்பிப் போயிட்டா. இந்த மனுஷன் ஃப்ளாட்டாக் கிடக்கிறார்.''

''எனக்கு ஃபோன் பண்ணக் கூடாதா?''

''அங்கே டெலிபோனும் ஃப்ளாட்!''

''ஆனாலும் உனக்குக் குண்டு தைரியம் தாரா. டாக்ஸியிலே நட்ட நடு ராத்திரி யிலே....''

அவள் நைட்டியின் நாடாவை வேகத் துடன் முடிந்து கொண்டே முகத்தில் பிர சன்னமில்லாமல் சொன்னாள்—

''அரே 'யார்', நான் டாக்ஸிக்காரனை நம்புவேன். உன்னுடைய கும்பலைத்தான் நம்பமாட்டேன்! டிஸ்கஸ்டிங்!''

அவனுடைய முகத்தில் சீற்றம் தெரிந்தது. சிவந்து பளபளத்திருந்தது. இந்த நேரத்தில் மேற்கொண்டு விவாதம் ஏதும் வேண்டாம் என்று அவன் மௌனமானான்.

தலையணையில் முகத்தைக் கவிழ்த்து அவள் படுத்தாள். அலை அலையாய்ப் பளபளத்த அவளது தலைமுடியை அவன் மிருதுவாக வருடினான்.

''கச்சேரி எப்படி இருந்தது?'' என்றான் ஜாக்கிரதையாக.

''நன்றா யிருந்தது. ஆனா போரடிச்சுது. எத்தனை நாழி கேட்க முடியும்?''

''நீ இன்னும் வரல்லியேன்னு நான் ரொம்பக் கவலைப்பட்டேன் கண்ணு!''

அவள் சட்டென்று திரும்பிப் படுத்தாள். கண்களில் அவனுக்கு விளங்காத ஒரு கோபம் பளபளத்தது.

''எனக்காக நீ கவலைப்பட வேண்டாம் கார்த்திக். என் உணர்ச்சிகளுக்கு மதிப்புக் கொடு போதும். இன்னிக்கு வெறும் கச் சேரின்னு சொல்லி அப்புறம் ட்ரிங்ஸ் ஆரம்பிச்சு சாப்பாடு வரதுக்குள்ளே எனக்கு வெறுத்துப்போச்சு. என்னையே நான் கேவல மாக்கின்ட மாதிரி எனக்கு என் மேலேயே கோபம் வந்தது.''

அவன் சின்னச் சங்கடத்துடன் கேட்டான்.

''என்ன நடந்தது தாரா?''

அவள் சோர்வுடன் கண்களை மூடிக் கொண்டாள்.

''ஒண்ணுமில்லே விடு!''

''பின்னே ஏன் இத்தனை கோபம்?''

''என் மேலேயேதான் எனக்குக் கோபம். வேறு யார் மேலேயும் இல்லே. நாய் குரைக் கிறதேன்னு கோபப்பட முடியுமோ? அதோட சுபாவம், குரைக்கிறது!''

அவன் செல்லமாக அவளுடைய முகவாயை நிமிண்டினான்.

''நான் நாயில்லையே?''

''நீ ஒரு பூனை. கண்ணை மூடிண்டு பாலைக் குடிக்கிற பூனை. நாயை விட மோசம். தன்னைப் பாதிக்கிற விஷயத்தைத் தவிர பாக்கி எதைப் பற்றியும் கவலைப்படாத, அல்லது புரிஞ்சுக்காத ஜன்மம்!''

''என்ன நீ இத்தனை மோசமா என்னைக் கண்டெம் பண்றே!''

அவள் சட்டென்று திரும்பி அவன் மார்பில் முகத்தைப் புதைக்துக் கொண்டாள்.




உலகிலேயே மிகப் பெரிய வைரம் ''கல்லினன்'' என்பது. இது 1905ல் தென் ஆப்பிரிக்காவில் எடுக்கப்பட்டது மூவாயிரத்து நூற்று ஆறு கேரட் எடை அது இருந்தது.

''எக்ஸெல்ஸியர்'' என்ற வைரம் இரண்டாவது பெரிய வைரம். 995 கேரட் எடையுள்ள இதுஅமெரிக்காவில் 1893ல் கிடைத்தது.

''கிரேட் மொகல்'' என்ற 817 கேரட் வைரம் இந்தியாவில் சுமார் முந்நூறு ஆண்டுகளுக்கு முன் கண் டெடுக்கப்பட்டது.

நான்காவது இடத்தைத்தான் பிடிக் கிறது உலகப் புகழ் பெற்ற ''கோஹி னூர்'' வைரம். இதன் எடை 800 கேரட்! இந்தியாவில் கிடைத்தது!

'வீக்'கிலிருந்து சேலம் சக்திக் கனல்

''ஸாரி கார்த்திக்! என்னை நீ புரிஞ்சுக் கணும்!''

''முயற்சி பண்றேன்'' என்றான் அவன் மிருதுவாக.

அவன் மேற்கொண்டு எதுவும் பேசாமல் அவளை அணைத்தபடியே மெல்லத் தூங்கிப் போனான்.

லோபோ வீட்டில் என்ன நடந்திருக்கும் என்று அவனுக்குக் குழப்பமாக இருந்தது. இவள் மிக மெல்லிய உணர்வுகளைக் கொண்ட வள். லோபோ விளையாட்டாகப் பேசும் பேச்சைக் கூடத் தவறாக எடுத்துக்கொள் ளும் ரோஷக்காரி. அவருடன் ஏதாவது இசகு பிசகாகச் சண்டை போட்டு விட் டிருப்பாளோ என்று கவலை ஏற்பட்டது. இவளுடைய அம்மா ஒரு துருவம் என்றால் இவள் மற்றொரு துருவம்.

மறு நாள் தாரா வழக்கம் போல் காப்பி போட்டாள், பேப்பர் படித்தாள். அகாலி தலை அலசினாள். 'முதுகெலும்பில்லாத அரசு' என்று திட்டினாள். அவன் நிம்மதி யுடன் அலுவலகத்திற்குக் கிளம்பினான்.

சென்றதுமே லோபோ கூப்பிட்டனுப் பினார்.

''உன் மனைவிக்கு ரொம்ப ரோஷம் கார்த்திக்!'' என்றார்.

அவனுக்குத் 'திக்' என்றது.

''எத்தனை சொன்னேன் தனியாகக் கிளம்பிப் போகாதே, நான் கொண்டு விடு கிறேன் என்று! கேட்கவேயில்லை. கிளம்பி விட்டாள்.''

இதற்கு என்ன பதில் சொல்வது 'என்று புரியாத சங்கடத்துடன் அவன் மௌனமாக இருந்தான்.

''என்ன சொன்னாள்?''

அவன் கூச்சத்துடன் சிரித்தான். ''நீங்கள்

ராணே நிறுவனம் ஒரு விடுமுறை நாளில் சுறுசுறுப்பாக இயங்கிக்கொண்டிருந்தது.

விசாரித்ததில், அதில் பணிபுரியும் ஒரு தொழிலாளி சிறுநீரகக் கோளாறால் கவலைக்கிடமாக உள்ளதாகவும் உடனே அவருக்கு மாற்றுச் சிறுநீரகம் பொருத்தும் செலவை (சுமார் ஐம்பதாயிரத்துக்கும் மேல்) ஏற்பதற்காக அன்று ஒரு நாள் எல்லா ஊழியர்களும் பணி புரிந்து அன்றைய ஊதியத்தைக் கொடுக்க முன் வந்துள்ளனர் என்றும் தெரிய வந்தது. அத்துடன் பத்தாயிரம் கொடுக்க முன்வந்துள்ள நிர்வாகத்தினரையும் பாராட்டாமல் இருக்க முடியவில்லை.

—எம். லக்ஷ்மிப்ரியா



வண்டி ஓட்டும் நிலையில் இருக்கவில்லை என்றான்.''

லோபோ பகபகவென்று சிரித்தார். ''அவள் என்னைக் குழந்தை என்று நினைத்தாளா? எத்தனை குடித்தாலும் என் நிதானம் நழுவாது. இருந்தாலும் ரொம்பத் தன்னம்பிக்கை உள்ளவள்தான் அவள். ரிமார்க்கபிள்!''

தாரா ஏதோ இவரிடம் எசகு பிசகாகப் பேசியிருக்க வேண்டும் என்கிற தீர்மானத்தில் அவன் அவரிடம் தனக்கிருக்கும் உறவு சுமுகமாக இருக்க வேண்டும் என்று அடுத்து வரும் நாட்களில் சர்வஜாக்கிரதையாக இருந்தான்.

லோபோ அவனைக் கட்டாயப்படுத்தி வீட்டிற்குச் சீக்கிரமாக அனுப்ப ஆரம்பித்தார்.

''மனைவியைக் கவனி கார்த்திக்!'' என்று புத்திமதி சொன்னார். ''அழகும் யௌவனமும் இருக்கும்போது கவனிக்கவில்லையானால் பிறகு எப்பொழுதுதான் கவனிப்பாய்?''

அவனது திடீர் கவனிப்பைக் கண்டு தாரா நையாண்டி செய்தாள்.

''என்ன திடீரென்று ரொம்ப ரொமான்டிக்'காப் போயிட்டே? என்ன விஷயம்?''

''பெண்டாட்டிக்கிட்டப் பிரியம் காட்டறதுக்கு ஏதாவது விஷயம் இருக்கணுமா என்ன? உன்னைக் கவனிக்கக் கூட இல்லாம என்ன வேலைன்னு....!''

''குட், யூ ஆர் இம்ப்ரூவிங்!''

''லோபோ கூடச் சொன்னார்!'' சட்டென்று அவன் விறைத்துக் கொண்டாள்.

''என்ன சொன்னார்?''

''மனைவியைக் கவனின்னார்!''

அவள் சரேலென்று மறுபுறம் திரும்பிப் படுத்தாள்.

''பெண்டாட்டியைக் கவனிக்கிறது கூட 'பாஸ்' சொன்னாத்தான் செய்வே போலிருக்கு.''

எத்தனை ரோஷம் இவளுக்கு என்று அவனுக்குச் சிரிப்பு வந்தது. ஏகக் கெஞ்சல் கெஞ்சி அவளைச் சமாதானப்படுத்த வேண்டியிருந்தது.

''படுக்கையிலே உங்க 'பாஸ்'ஸைப் பத்திப் பேசாதே. நமக்கு நடுவிலே அவரைக் கொண்டு வராதே!''

அவன் பெரிதாகச் சிரித்தான். ''நான் எதுக்குக் கொண்டு வரேன்? எனக்கென்ன பைத்தியமா?''

காற்றாய் விரைந்த நாட்களில் ஒரு நாள் அவள் சலனமற்ற குரலில் சொன்னாள்: துணிக்கு இஸ்திரி போடுகையில்—

''கார்த்திக் எனக்குக் குழந்தை பிறக்கப் போறதுன்னு நினைக்கிறேன்.''

செய்தியைச் ஜீரணித்துக் கொண்டதும் அவன் திக்குமுக்காடிப் போனான்.

''எனக்கா? நமக்குன்னு சொல்லு!''

அவன் தோளைக் குலுக்கினான்.

''எப்படி வேணும்னாலும் சொல்லிக்கோ''

''என்ன இது நீ இவ்வளவு பெரிய விஷயத்தை இத்தனை சாதாரணமாச் சொல்றே''

அவள் ஆங்கிலத்தில் சலனமில்லாமல் சொன்னாள்.

''இது மிக இயற்கையான ஒரு விஷயம். இந்தியாவிலே நிமிஷத்துக்குப் பத்துக் குழந்தைகள் பிறக்கின்றன' — யாருடைய கவனத்திலேயும் படியாதபடி. நமக்கு என்று வரும்போது அது உலக அதிசயமா?''

அவன் அவளை விநோதமாகப் பார்த்தான். சட்டென்று ஒரு விஷயம் அவனைத் தாக்கிற்று. முன்னைப் போல் இவள் ஜோக்கடித்துச் சிரித்துப் பேசுவதில்லை.

இவளுக்கு என்ன நேர்ந்து விட்டது.?

(தொடரும்)



✠ சைத்தானின் மனித வடிவமான டாமியன் தார்ன் சிலுவையில் அறையப்பட்டுள்ள ஏசுவை வெறித்து நோக்குகிறான். தீமைக்கும் தூய் மைக்கும் போராட்டம் தொடர்கிறது.

**ஓமன்-1ல் ஒரு குழந்தையிடமும் ஓமன்-2ல் ஒரு வாலிபனிடமும் புகுந்துகொண்ட சைத்தான் ஓமன்-3ல் நன்கு வளர்ந்த கூர்மதியாளனை ஆக்கிரமித்துக் கொள்ளும்போது ஆரம்பமாகிறது THE FINAL CONFLICT**

# இறுதிப் போராட்டம்

ஜான் ஃபேவல் இறையுணர்வு உள்ளவன் அல்ல. அவன் ஒரு விஞ்ஞானி. அவனுக்குப் பௌதிகமும் கணக்கும்தான் முக்கியம். டெலஸ்கோப் வழியே பார்க்கும்போது அவனுக்கு சொர்க்கம் தெரியவில்லை. நட்சத்திரங்கள் (சூரியன்கள்) கிரகங்கள் இவைதாம் தென்பட்டன.

அவனுடைய மிக நவீனமான வான சாஸ்திர ஆய்வுக் கூடத்தில் காப்பியை உறிஞ்சியபடியே ''எல்லாம் தயாரா?'' என்று கேட்டான். ''இன்று வானின் எந்தப் பகுதியைக் ஆராய்கிறோம்?''

''காஸியோபியா ஸார்!'' என்றான் உதவியாளன்.

ஜான் ஃபேவலுக்கு ஏதோ நினைவுக்கு வருவது போல் இருந்தது. ஆனால் சரியாக ஞாபகமில்லை. என்ன... என்ன?

''சில தினங்களுக்கு முன் இதே பகுதியை ஆராய்ந்தோம் இல்லையா?''

''திங்கட் கிழமை.''

உதவியாளன் அலமாரியைத் திறந்தான். திங்கட்கிழமை எடுத்த வண்ண டிரான்ஸ் பேரன்ஸியை ஃபேவலிடம் தந்தான். புதிதும் பழசுமான டிரான்ஸ்பேரன்ஸிகளை அருகருகே வைத்து மானிட்டர் பட்டனைத் தட்டினான். திரையில் மூன்று சூரியன்களின் (நட்சத்திரங்கள்) பயண மார்க்கம் தெரிந்தது. அவர்களுடைய கண்கள் நெருங்கி வரும் மூன்று புள்ளிகளை மேலும் கீழும் பக்கவாட்டிலும் பார்த்தன. திரையின் ஓரத்தில் மாறிவரும் டிஜிடல் எண்களையும் கவனித்தன.

அந்தக் கணத்தில் ஜான் ஃபேவலுக்கு அந்த விஷயம் ஞாபகம் வந்துவிட்டது. மூன்று ஆண்டுகளுக்கு முன்னால் வான சாஸ்திர ஆய்வாளர்களின் மாநாடு ஃபிரான்ஸில் நடந்தது. அப்போது ஒரு இத்தாலிய பாதிரி திடுதிப்பென்று உள்ளே நுழைந்தார். மேடையேறிப் பிரதிநிதிகளிடம் பேசினார்: ''காஸியோபியா பகுதியில் நெருங்கி வரப்போகிற

மூன்று சூரியன்களைக் கவனியுங்கள்! உங்களை கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன். அவை நெருங்கி வரும் சமயம் எனக்குத் தகவல் கொடுங்கள். ஏனெனில் அப்போது ஏக மீண்டும் பிறக்கப் போகிறார்!''

அந்தப் பாதிரியை யாரும் தடுக்கவில்லை. அவரைப் பைத்தியக்காரன் என்று அவர்கள் எண்ணவில்லை. அவன் பேச்சும் தோரணையும் அவர் மனப்பூர்வமாக நம்புவதையே பேசுகிறார் என்று எண்ணச் செய்தன. அவரைப் பேச அனுமதித்தனர். அவர் போன பிறகு தான் விஞ்ஞானிகள் தங்களுக்குள் சுசமுச வென்று பேசிச் சிரித்துக் கொண்டனர்.

டிஜிடால் எண்களின் சுழற்சி நின்று விட்டது. இப்போது மாறாமல் நிலையாக நின்ற எண்கள் 24.03.82. அது ஒரு தேதி. அந்தத் தேதியில் மூன்று நட்சத்திரங்கள் இணை சேரும். அதே தேதியில்தானா ஏக மீண்டும் பிறக்கப் போகிறார்! பாதிரியின் குரல் ஜான் ஃபேபவல் உள்ளத்தில் எதிரொலித்தது. அவன் கடவுள் நம்பிக்கை இல்லாதவனாயினும் தன்னை அறியாமல் சிலுவைக் குறி இட்டான்.

● ● ●

சிகாகோ நகரின் சாலைகளுக்குக் கீழே சுரங்கப் பாதை அமைக்கும் பணியில் ஈடுபட்டிருந்தான் ஜோவி. மாபெரும் இயந்திரம் ஒன்று பூமியைக் குடைந்து சொண்டிருக்க வெட்டி எடுக்கப்பட்ட களிமண், கன்வேயர் பெல்ட் மீதாகப் பயணப்பட்டு வெளியேறிக் கொண்டிருந்தது. குடையும் இயந்திரம் திடுமெனச் சிரமப்பட்டது. பிறகு சமாளித்துக் கொண்டு செயலாற்றியது. அப்போது கல்லும் கான்க்ரீட்டும் சிதறின. ஜோவி பயந்து போனான். சூபர்வைசர் வந்தார். ''கவலைப்பட ஏதுமில்லை. முன்பு தார்ன் மியூஸியம் கட்டப்பட்டிருந்த இடம் இது. அதன் அஸ்திவாரத்தை நமது சுரங்கப் பாதை ஊடுருவுகிறது. அதனால்தான் இயந்திரம் சிரமப்படுகிறது.''

இரசிகர் 1: அந்தக் கதாநாயகி நடிகை ஏன் கவர்ச்சி நடிகையா மாறிட்டாங்க?

இரசிகர் 2: வெய்யில்லே புடவையைச சுத்திக்கிட்டு நடிக்க முடியலையாம்.

—ப. பழனி



ஜோவிக்கு நினைவு வந்தது. தார்ன் மியூசியம் பத்துப் பதினைந்து ஆண்டுகளுக்கு முன் எரிந்து சாம்பலாகி விட்டது. அதன் அஸ்திவாரத்தை இப்போது பெயர்க்கிறது இயந்திரம்... ஒரு களிமண் கட்டி அவன் கவனத்தைக் கவர்ந்தது. அதற்குள் ஏதோ வெள்ளையாக... எடுத்து மண்ணை உதிர்த்துப் பார்த்தான்.... ஒரு மண்டை ஓடு! அப்புறம் மேலும் சில எலும்புகள். எலும்புகளுக்கு மத்தியில் ஏதோ உலோகப் பொருள்கள்... ஒன்றை எடுத்துச் சேற்றை வழித்துவிட்டுப் பார்த்தான். ஒரு கத்தி! பழங்காலத்திய கத்தி... விளிம்பில் விரலை ஓட்டினான். இன்னும் கூர்மை மழுங்கவில்லை! அதன் பிடி ஒரு சிலுவை வடிவத்தில் இருந்தது. அதை அணைத்தபடி ஏகவின் வடிவம். ஒன்று, இரண்டு, மூன்று... ஒரே மாதிரி ஏழு கத்திகள் அகப்பட்டன.

ஜோவி யோசித்தான். எலும்புத் துண்டங்கள்... கத்திகள் என்றால் ஏதோ கொலை நடந்திருப்பதாக அர்த்தம். தார்ன் மியூசியத்தில் தீப்பிடிப்பதற்கு முன் யாரோ ஒருவரோ....பலரோ... கொலை செய்யப்பட்டிருக்கிறார்கள். இதை அதிகாரிகளிடம் சொன்னால் கத்திகளை அவர்களிடம் தந்து விட வேண்டும். இருபது வருஷத்திற்கு முற்பட்ட கதை. அதை இப்போது கிளறுவானேன்....? கத்திகளை அடகுக் கடையில் கொடுத்தால் காசு கிடைக்கும். பழங்காலப் பொருள்களுக்கு எப்போதுமே மதிப்பு உண்டு...

அடகுக் கடையிலிருந்து பழம்பொருள் விற்பனையாளரிடம் அந்தக் கத்திகள் வந்து சேர்ந்தன. ஏலம் விடப்பட்டன. அவற்றை வாங்கியவன் ஏதோ யோசனை தோன்ற டுலான் பாதிரிக்குப் ஃபோன் செய்ய அவர் இதாலியிலிருந்து பறந்து வந்தார். ஏகவைக் கைப்பிடியில் கொண்ட அந்தக் கத்திகளைத் தனக்கு விற்றதற்காக நன்றி கூறிவிட்டு அவற்றுடன் மறுபடி ரோமுக்குப் பறந்து போய் பாதிரி டி கார்லோவிடம் சமர்ப்பித்தார்.

கத்திகளைப் பெற்றுக் கொண்ட டி கார்லோ ஏகவுக்கு நன்றி கூறிப் பிரார்த்தித்தார். ஏகவின் எதிரி உலகில் உலாவுகிறான். தன் தீச் செயல்களைப் புரிந்து கொண்டிருக்கிறான். அவனை முன்னர் இரு முறை ஒழிக்க முயன்றும் தோல்வியே கிட்டியிருந்தது. அவனை அழிக்கக் கூடிய ஆயுதங்கள் இவைதாம்: இந்த ஏழு கத்திகள்தாம் என்பது டி கார்லோவுக்குத் தெரியும். இவை தம்மிடம் வந்து சேர்ந்து விட்டதால் தாம்தான் தலைமை ஏற்று அந்தக் காரியத்தை நிறைவேற்றி வைக்க வேண்டும். இதே நேரத்தில் ஏகவின் மறு பிறப்புப் பற்றியும் அவருக்குச் செய்தி எட்டியிருந்தது. நட்சத்திரங்களை ஆராயும் வான சாஸ்திரி ஃபேவல் தகவல் அனுப்பியிருந்தான். மூன்று நட்சத்திரங்கள் வானில் காஸியோபியா பகுதியில் இணை சேரும் நாள் 24.3.82. ஆக, இறுதிப் போராட்டம் ஆரம்பமாகி விட்டது!

பிரிட்டனிலிருந்த அமெரிக்கத் தூதுவருக்கு அடிக்கடி சித்தப் பிரமை ஏற்பட்டு வந்தது. ஓநாய்கள் அவரை அடிக்கடி துரத்தின. கழுகுகள் அவரைக் கொத்தின. கழுதைப் புலிகள் அவரைக் கடித்துக் குதறின. எவ்வளவுதான் முயன்றாலும் இது போன்ற பிரமைகளிலிருந்து அவரால் தம்மை விடுவித்துக் கொள்ள முடியவில்லை. நாளுக்கு நாள் இந்தப் பிரமைகள் அடிக்கடி தோன்ற ஆரம்பித்தன. அதிக நேரம் நீடித்தன. அவரால் தப்பி ஓட முடியவில்லை.

அன்று அவர் காரியாலயத்துக்கு வந்ததுமே இன்டர்காமில் காரியதரிசியை அழைத்தார்.

''இன்று பிற்பகல் மூன்று மணிக்கு என் ஆபீஸ் அறையில் ஒரு பிரஸ் கான்ஃபரன்ஸ் நடத்த விரும்புகிறேன், பத்திரிகைக் காரியாலயங்களுக்கு ஃபோன் செய்து சொல்லிவிடு.''

திகைத்துப் போன காரியதரிசி கூறினார்: ''ஆனால் நாளைக் காலை பத்து மணிக்கு திருபார் கூட்டம் ஏற்பாடாகி யிருக்கிறதே!''

அமெரிக்கத் தூதுவர் அமைதியாக அழுத்தமாகச் சொன்னார்: ''இன்று பிற்பகல் மூன்று மணிக்கு என்று அதை மாற்றிவிடு!''

பரபரப்பாகக் காரியதரிசிகள் இயங்க ஆரம்பிக்கவும் நிதானமாக அமெரிக்கத் தூதர் தமது அறையில் செயல்பட்டார். அறையில் தனித்திருந்தார் அவர். டைப்ரைட்டர் ஒன்றிலிருந்து ரிப்பனை எடுத்தார். அதன் ஒரு முனையைத் துப்பாக்கியின் விசையில் கட்டினார். மற்றொரு முனையை அறைக் கதவின் பிடியில் முடிச்சுப் போட்டார். துப்பாக்கியைத் தமது கால்களுக்கு இடையில் தலையைக் குறிபார்க்க வைத்துக்கொண்டார். சரியாக மூன்று மணிக்கு அறைக் கதவு திறக்கப்படும்போது டைப் ரைட்டர் ரிப்பன் இழுக்கப்படும். துப்பாக்கியின் விசை இயங்கும். குண்டுபாயும்... அப்புறம்... அப்புறம்... சித்தப் பிரமைகள் ஏதும் தோன்றாது... நிம்மதி — பரம நிம்மதி!

● ● ●

அமெரிக்க தூதர் டாயல் சவப் பெட்டியில் படுக்க வைக்கப் பட்டிருந்தார். அவர் உடல் அமெரிக்காவுக்குப் பயணப்பட்டது. இறுதிச் சடங்குகள் வாஷிங்டனில் நடக்கும். இதே நேரத்தில் அமெரிக்க ஜனாதிபதியுடன் தார்ன் நிறுவனங்களின் அதிபதி டாமியன் தார்ன் பேசிக் கொண்டிருந்தான்.

தார்ன் நிறுவனங்கள் உலகெங்கும் வியாபித்திருந்தன. பல கோடி டாலர்களைச் சம்பாதித்தன. தொழில் வர்த்தகசாம்ராஜ்யத்தில் கிடைத்த லாபத்தை தார்ன் நிறுவனங்கள் சமூக நலனுக்கும் பயன்படுத்தின. பல தொல் பொருள் காட்சியகங்கள் நடத்தின. அவற்றுள் ஒன்றுதான் பதினைந்து வருஷங்களுக்கு முன் சிகாகோவில் சாம்பலாயிற்று.

''பிரிட்டனுக்கு அமெரிக்கத் தூதராக நான் போவதென்பது நடக்காத காரியம். அப்படிப் போனால் தார்ன் நிறுவனங்கள் மீது எனக்குள்ள ஆதிக்கத்தை நான் விட்டுக் கொடுக்கும்படியாகுமே'' என்றான் டாமியன் தார்ன்.

''அப்படியெல்லாம ஒன்றும் நேராது; அதற்குத் தக்க ஏற்பாட்டை நாம் செய்து கொள்ளலாம்'' என்று உறுதி அளித்தார் அமெரிக்க ஜனாதிபதி.

சில தினங்களில் டாமியன் தார்ன் அமெரிக்கத் தூதர் பதவி ஏற்க தனது தார்ன் நிறுவன விமானம் ஒன்றில் லண்டனுக்குப் பயணமானான். அந்த விமானம் லண்டன் ஹீத்ரோ விமான நிலையத்தில் இறங்கிக் கொண்டிருந்த அதே சமயம் இத்தாலியில் பாதிரி டி கார்லோ தம்மைச் சுற்றி வேறு சில துறவிகளை வரவேற்றுக்கொண்டிருந்தார். ஒருவர் பின் ஒருவராக ஆறு பேர் வந்து சேர்ந்தார்கள். பிரார்த்தனைகள் முடிந்த பிறகு பாதிரி டி கார்லோ பேசினார்:

''கிறிஸ்துவின் எதிரியான சைத்தான் இன்று உலகில் யாருடைய வடிவில் நடமாடிக் கொண்டிருக்கிறது என்பது நமக்கு இந்தக் கத்திகளைப் பார்க்கும்போதே தெரிய வருகிறது. டாமியன் தார்ன் ஒழிக்கப்பட வேண்டும். ஏசுவின் புனித புனர் அவதாரத்துக்கு வழி வகுக்கப்பட வேண்டும். ஒளியின் குழந்தையை அவன் அழிக்கு முன் இருட்டின் இளவலான அவனை நாம் ஒழித்துக் கட்ட வேண்டும்!

''இப்பொழுது நீங்கள் ஒவ்வொருவராக முன்வந்து இருட்டின் இளவலை அழிக்கக் கூடிய ஒரே ஆயுதமான இதனைப் பெற்றுக் கொள்ள வேண்டுகிறேன்.'' ஒருவர் பின் ஒருவராகச் சென்று ஆறு கத்திகளைப் பெற்றுக் கொண்டார்கள். ஏழாவது கத்தியை டி கார்லோ தாமே வைத்துக் கொண்டார்.

''எல்லோரும் தத்தமது ஆத்மாவுக்காகப் பிரார்த்தித்துக் கொண்டு விடைபெறுங்கள்'' என்றார் டி கார்லோ. (தொடரும்)



வாணியம்பாடிக்கு அருகில் உள்ள கிராம நாயக்கன் பட்டிக் கிராமத்தில் வளரும் தென்னைகளை 'கருந்தலை' என்ற புழு தாக்கி கடும் சேதம் விளைவிக்கிறது. அதனால் அவைகளை ஒழிக்கத் தென்னை மரத்துக்கு நுவக்கிரான் மருந்தை ஊசி மூலம் செலுத்துகிறார்கள். மனிதனுக்கு உடல் நிலை குணமாவது போல் தென்னையும் தேறிவிடுகிறதாம்.

—'பட்டாணி'

# அர்த்தமற்ற

உலகில் ஒருபுறம் பசியும் பிணியும் மக்களை வருத்த வல்லரசுகளோ கோடிக் கணக்கான டாலர்களை ஆயுதங்களைச் செய்து குவிப்பதிலேயே செலவிடுகின்றன. இந்த ஆயுதங்களைப் பயன்படுத்தினால் வல்லரசுகளே இராது; பாதி உலகுக்கு மேல் பூண்டோடு அழிந்து போகும் என்பதைப் பார்க்கையில், அச்சமும் அவநம்பிக்கையும் காரணமாக விளையும் இந்த ஆயுதக் குவிப்புப் போட்டி எவ்வளவு அபத்தமானது என்பது விளங்கும்.

1962க்கும் 72க்கும் இடைப்பட்ட காலத்தில் வியட்நாம் போர் காரணமாக அமெரிக்காவின் ராணுவச்செலவினம் அதிகரித்தது. பின்னர் படிப்படியாகக் குறைந்தது. சமீப காலமாக மறுபடியும் உயர ஆரம்பித்திருக்கிறது. ருஷ்யாவின் ராணுவச் செலவினமோ 62 தொடங்கி 82 வரை படிப்படியாக உயர்ந்து வந்திருக்கிறதேயன்றிச் சற்றும் குறையவே இல்லை.






இந்த வரைபடம் அணு குண்டுகளைத் தாங்கிய ஏவுகணைகளும் விமானங்களும் எந்த அளவில் தயாரிக்கப்படுகின்றன என்பதை உணர்த்துகிறது. இருபது ஆண்டு காலத்தில் அமெரிக்காவை முந்திக்கொண்டு மிக அதிகமான அளவில் ருஷ்யா இவற்றைத் தயாரித்துக் குவிக்கிறது.



# ஆயுதக்குவிப்பு!




வல்லரசுகள் தங்கள் பாதுகாப்புக்கு ஆயுதங்களைச் செய்து குவிப்பது போதாதென்று பிற நாடுகளுக்கும் விற்றுப் பணம் பண்ணுகின்றன. எழுபதுகளின் தொடக்கத்தில் ஆயுத வியாபாரத்தில் அமெரிக்காவை விட மிகவும் பின்தங்கி இருந்த ருஷ்யா இன்று யுத்த தளவாடங்கள் வியாபாரத்தில் உலக நாடுகள் எதுவுமே எட்டிப் பிடிக்க முடியாத அளவில் உயர்ந்து முதன்மை ஸ்தானம் வகிக்கிறது. இந்த ஆயுத வியாபாரத்தால் உலகில் ஆங்காங்கே போர்கள் மூள்வதற்கான சாத்தியக் கூறுகள் சதா அதிகரிக்கின்றன.

ஏவுகணைகளைப் பொருத்த பட்டியல் அமெரிக்காவை விட இன்று அதிக எண்ணிக்கையில் ருஷ்யாவிடமே உள்ளன. ஆனால் ஆயுதக் குறைப்புக்கான அமெரிக்கத் திட்டத்தை ருஷ்யா ஏற்குமானால் எதிர்காலத்தில் இருவரிடமும் சமமான அளவில் ஏவுகணைகள் இருக்கும். 'ஏற்குமா?' என்ற கேள்வி ஒருபுறமிருக்க ''ஏவுகணைகளே இல்லாத நாள் என்று வருமோ?'' என்று ஏங்குகிறது உலகம்.






நாம் மௌனத்தில் பேசிடுவோம்
மரணத்தில் கூடிடுவோம்
—காலில் ஜிப்ரான்

# நேசமுள்ள வான்சுடரே

8

## சவீதா

**ப**த்மாவும் டெய்சியும் 'ட்ரைவ் இன்'னை விட்டு வெளியேறியபோது மத்தியானம் ஒரு மணி இருக்கும். நிழல் தெறிய நடை பாதையில் நடந்தனர். ராம்குமார் தந்த புத்தகத்தைப் பத்மா நெஞ்சோடு அணைத்திருந்தாள்.

''அந்த புக்கை நீயே சுமந்துக்கிட்டு வர்றியே என்கிட்டக் கொஞ்சம் கொடேன்'' என்றாள் டெய்சி.



''பரவாயில்லே, எனக்கு இது ஒண்ணும் சுமையில்லே.''

''ஏன் நாங்கள்ளாம் அதைத் தொடக் கூடாதா? சரி நீயே வெச்சுக்கோ'' என்று கிண்டலாகப் புன்னகை செய்தாள் டெய்சி.

உடனே பத்மா, ''இந்தா. ஹாஸ்டல் வரைக்கும் நீயே கொண்டு வா'' என்று புத்தகத்தை அவளிடம் கொடுத்தாள்.

''இன்னும் ரொம்பத் தூரம் நடக்கணுமா? எங்கே இருக்கு உங்க சித்தி வீடு?''

''பக்கத்துலதான். சர்ச் பார்க்குக்கு எதிர் சந்தில. இவ்வளவு தூரம் வந்து விட்டு அவங்களைப் பார்க்காமப் போனா நல்லா இருக்காது.''

லட்சுமி லாட்டரி ஏஜன்சி என்ற போர்டு திண்ணையில் சாய்ந்திருந்தது. சித்தப்பா தியாகராஜன் பரிசுச் சீட்டுக்களைப் பரப்பிக் கொண்டு, சட்டை இல்லாமல் பானை வயிற்றைக் காண்பித்துக்கொண்டு உட்கார்ந்திருந்தார். சற்றுத் தளர்ந்து அதிகச் சிவப்பாகத் தோன்றினார். மொசெய்க் தரையில் உருட்டி விட்ட கோலிக் குண்டுகளைப் போல அவருடைய வழுக்கைத் தலையில் வியர்வைத் துளிகள்.

படியில் ஏறிய பத்மாவைத் தன் புடைத்து மேலெழும்பிய தவளைக் கண்களால் பார்த்து ''வாம்மா'' என்றார். அவர் முகத்தில் எந்த மாற்றமும் இல்லே.

''சித்தி இருக்காங்களா சித்தப்பா?''

''அவ எங்கே போகப் போறா. உள்ளே தான் இருக்கா, போ.''

''என் கிளாஸ்மேட் டெய்சி.''

டெய்சி மரியாதையுடன் கை கூப்பினாள்.

சித்தி வாடாமல் அகலமாக இருந்தாள். நெற்றிக்கு நாலணாவை விடப் பெரிதாக இட்டிருந்தாள். எவர்சில்வர் காரியரின் அடுக்குகளைப் பிரித்து வைத்துச் சாதம் குழம்பு, கறி வகைகளால் நிரப்பிக்கொண்டிருந்தாள்.

''சார்! என் உம்ம பையன் மெட்ராஸ் காலேஜ்லேதான் சேருவேன்னு அடம் பிடிக்கிறான்?''
''அங்கேதான் படம் உடனுக்குடன் ரிலீஸ் பண்றாங்களாம்!''
இலா. வில்சன்



''எப்படி இருக்கீங்க சித்தி?''

''வாம்மா, இன்னிக்குத்தான் நாங்க இருக்கிறது ஞாபகம் வந்துச்சா. இது யாரு?'' சித்தியின் தோடு பழைய இளமையோடு சுடர் வெட்டியது.

''டெய்சி. என்னோடு படிக்கிறா.''

''இன்னும் எவ்வளவு நாளைக்குப் படிச்சுக்கிட்டு இருக்கப் போறீங்க?''

''இன்னும் அஞ்சு வருஷம் படிக்கணும் சித்தி.''

''அடேயப்பா! அஞ்சு வருஷமா? நீங்க படிச்சுச் சம்பாதிக்கப் போடறதுக்குள்ளே நாங்க போய்ச் சேர்ந்துடுவோம்.''

''நீங்க இன்னும் நூறு வருஷம் இருப்பீங்க சித்தி. சாப்பிட்டீங்களா?''

''இனிமேத்தான். பாக்கறேல்ல. சித்தப்பாவுக்கு இப்பத்தான் எடுத்து வெச்சிக்கிட்டிருக்கேன்.''

மத்தியானச் சாப்பாட்டைச் சித்தப்பா வெளித் திண்ணையில் அமர்ந்துதான் சாப்பிடுவார். காரியரின் அடுக்குகளை வட்டமாகப் பரப்பிக் கொண்டு அரை மணி நேரம் சாப்பிடுவார். சாப்பிடும்போதே பரிசுச் சீட்டு விற்பார். காசை இடக்கையால் வாங்கிப் பெருங்காய டப்பாவினுள் போடுவார்.

சித்தி காரியரையும் சாப்பாட்டுத் தட்டையும் கையில் எடுத்தாள்.

''குடுங்க, நான் கொண்டு போறேன்'' என்று பத்மா அவள் கையில் இருந்தவைகளை வாங்கிக் கொண்டு திண்ணையை நோக்கி நடந்தாள்.

சித்தி செம்பில் தண்ணீர் எடுத்துக் கொண்டு பத்மாவுக்குப் பின்னே இடமும் வலமும் அசைந்து நடந்தாள்.

டெய்சி பத்மாவின் கையைச் சுரண்டி, ''நேரமாயிடுச்சு. லேட்டாப் போனா டிக்கட் கிடைக்காது'' என்றாள்.

''ஷ்ஷு இங்க வச்சு சினிமா எடுக்காதே. சித்தி காதில விழுந்தா நானும் வர்றேன்னு புறப்பட்டுருவா.''

மாட்னி காட்சி ஆரம்பித்த பிறகு இருவரும் உள்ளே நுழைந்து இருளில் தடுமாறினர். பத்மாவின் மனம் ராம்குமாரையே நினைத்தது. அவன் கொடுத்த புத்தகத்தை மடியில்வைத்துஅணைத்துக்கொண்டிருந்தாள்.

இந்தப் படத்தில் அவள் மனம் ஈடுபடவில்லே. எதற்காக இவ்வளவு விலே கொடுத்து எனக்கு இதை வாங்கித் தந்திருக்கிறான் என்று யோசிப்பதிலேயே அவளுக்கு ஒருவித சுகம் கிடைத்தது. உலகத்தின் இளவரசியாக முடிசூட்டப்பட்டதைப் போன்று கோலாகல குதூகல உணர்வில் திளைத்தாள். 'ஹி லவ்ஸ் யு' என்று டெய்சி பானந்தி சாப்பிட்டபோது சொன்னது திரும்பத் திரும்ப அவள் காதில் கேட்டது.

விடுதிக்கு அருகே இருவரும் ஆட்டோவை விட்டு இறங்குவதற்கும் மழை 'சடசட' வென்று பிடித்துக் கொள்வதற்கும் சரியாக இருந்தது.

நனைந்து கொண்டு விடுதிக்குள்ளே ஓடினர். ஸர்ஜரி புத்தகம் நனைந்து விடாதபடி

புடவைத் தலைப்பினுள் மறைத்துக் கொண்டாள்.

சீக்கிரமாக இருட்டிக் கொண்டு வந்ததால் விடுதி அறைகளில் விளக்குகள் ஏற்றப்பட்டு, பாட்டும், சிரிப்பொலியுமாக அந்த அந்தி வேளையில் விடுதி 'ஜேஜே' என்றிருந்தது.

அறையைத் திறந்து உள்ளே நுழைந்ததும் ''இன்னிக்கு எக்ஸிபிஷனுக்குப்போனது உனக்குத்தாண்டி லாபம்'' என்றாள் டெய்சி. அவள் பார்த்துக் கொண்டிருந்த போது புத்தகத்தைப் பத்மா அலட்சியமாகப் படுக்கை மீது போட்டாள். அவள் பார்க்காத நேரத்தில் அதை எடுத்துத் தலைமாட்டில் இருந்த புத்தக அலமாரியில் பயபக்தியுடன் வைத்தாள்.

கார்டனரை மெஸ்ஸுக்குஅனுப்பி ரெண்டு காப்பி வாங்கிக்கிட்டு வரச்சொல்லுவோமா? என்றாள் பத்மா. அவளிடம் புதிய உற்சாகம் தென்பட்டது.

''இந்த மழை நேரத்துக்கு எனக்குக்கூட ஹாட்டா சாப்பிடணும் போல இருக்கு'' என்றாள் டெய்சி.

நனைந்த உடைகளை இருவரும் களைந்து கொண்டிருந்தபோது டெய்சி, ''ஏண்டி உங்க சித்தியும் சித்தப்பாவும் ஃபார்மா லிடிக்காவதுகூட சாப்பிடச் சொல்ல மாட்டாங்களா?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டாள்.

பத்மா பதில் எதுவும் சொல்லாமல் இவளை சித்தி வீட்டுக்கு அழைத்துச் சென்றது தப்பு என்று எண்ணினாள். டெய்சி ஃபிளாஸ்கை எடுத்துக் கொண்டு தோட்டக்காரனைத் தேடி வராந்தாவில் நடந்தாள்.

**ம**றுநாள் வழக்கம் போல அனாடமி பிராக்டிக்கலுக்காக அதிகாலையில் புறப்பட்டனர். சூட்கேசைப் பத்மா திறந்தாள். சின்னத் தடுமாற்றம்.

எதை உடுத்துவது? கனகாம்பர நைலக்சையும், பனி வெள்ளை டெரிகாட் ப்ளவ்சையும் அணிந்தால் மிகவும் ஆடம்பரமாகத் தோன்றும். டெய்சி தொண்டையைக் கனைத்துக் கிண்டல் செய்வாள். ராம்கூட தப்பாக எடை போடலாம். ஒரு புத்தகத்தைப் பரிசு கொடுத்ததால் மேலும் நம்மைக் கவர்வதற்காக இவள் சிங்காரித்துக் கொண்டு வந்திருக்கிறாள் என்று... சேசே அவனுக்கு இப்படி வில்லியாக எண்ணத் தோன்றாது.

நீண்ட யோசனைக்குப் பிறகு சாதாரண இளநீலப் பருத்திப் புடவையையும் அதே நிற 'டு பை டு' ஜாக்கெட்டையும் அடியில் இருந்து உருவி எடுத்தாள். வாடிக்கையாக எளிமையாகச் செல்பவள் அன்று தலையைப் படிய வாரிக்கொள்ளாமல் அலட்சியமாகக் கூந்தல் இழைகளை முகத்தைச் சுற்றிப் பறக்க விட்டுக் கொண்டு, புடவையை ஏனோதானோ என்று சுற்றிக் கொண்டு படு எளிமையாகக் கல்லூரிக்குப் புறப்பட்டாள். அளவற்ற மன நிறைவால் அவள் முகம் சோகம் காட்டியது.

அன்று வகுப்புக்களிலும், மரத்தடியிலும் ஆய்வுக் கூடங்களிலும் ராமின் பார்வை



''எனக்கு லஞ்சம் கொடுத்த விஷயத்தை எங்க ஆபீஸில் வேறு யாருக்கும் தெரியப்படுத்தி விடாதீர்கள்.''

''அய்யய்யோ! அப்படியெல்லாம் உங்களுக்கு ஆபத்தைத் தேடித் தர மாட்டேன்.''

''அட நீங்க ஒண்ணு! ஆபத்து எனக்கல்ல, உமக்குத்தான். தெரிந்தால் ஆள் ஆளுக்கு உம்மிடம் லஞ்சம் கேட்க ஆரம்பித்து விடுவார்கள்.''

—திசை முத்து

களுக்கு விலகி டெய்சியின் தோளுக்குப் பின்னால் மறைந்து கொண்டாள். கல்லூரி நூலகத்திலிருந்து மாலையில் வெளியேறிய சமயம் 'ஹெல்மெட்'டை இடுக்கிக்கொண்டு வந்த ராமிடம் வகையாகச் சிக்கிக் கொண்டாள். நீள வராந்தாவில் அவர்கள் இருவரைத் தவிர வேறு யாரும் காணப்படவில்லை. எப்படி ஆரம்பிப்பது என்று தெரியாமல் ஒரு கணம் திணறினாள். அவன், ''ஏன் இன்னிக்கு ஒரு மாதிரியா, டல்லா இருக்கீங்க. உடம்பு சரியில்லையா?'' என்று கேட்டான்.

''நேத்து நீங்க வச்சுட்டுப் போன புக்கை நான் எடுத்துக்கிட்டேன்.''

''தாங்க்ஸ்.''

''எதுக்காக அதை வாங்கிக் குடுத்தீங்க?''

''எதுக்காகக் குடுத்தேன்னு இன்னும் உங்களால கண்டு பிடிக்க முடியலையா?'' என்று வெண்மையாகச் சிரித்தான்.

''முடியல.''

''நேத்து என்ன தேதி?''

சொன்னாள்.

''உங்க பர்த் டே இல்லையா?''

பத்மாவின் இதயத்தில் இனிய அதிர்ச்சி. கள்ளங் கபடில்லாத வியப்பு அவள் விழிகளில் குவிந்தது. பதில் ஏதும் சொல்லாமல் அவன் முகத்தையே பார்த்தாள்.

''முன் பக்கத்தில மெனி ஹாப்பி ரிடர்ன்ஸ் எழுதிக் கொடுக்கணும்னுதான் நினைச்சேன். உங்க ரூமுக்கு வர்றவங்க அந்த புக்கை எடுத்துப் புரட்டுவாங்க. 'காஸிப்'புக்கு எதுக்காக இடம் கொடுக்கணும்னு ஒண்ணுமே எழுதாமக் குடுத்துட்டேன். ஸாரி.''

''நேத்து என் பர்த் டேங்கறது இப்ப நீங்க சொன்ன பிறகுதான் எனக்கே ஞாபகம் வருது...., எப்படிக் கண்டுபிடிச்சீங்க?''

ராம் புன்னகையுடன், ''எப்படியோ கண்டு பிடிச்சேன்.'' என்றான். தூரத்தில் ஒரு பேராசிரியருடன் இறுதியாண்டு மாணவிகள் விவாதித்துக் கொண்டு வந்தனர். ''ஸீயூ'' என்று சொல்லிவிட்டு ராம் விலகினான். பைக்கை நோக்கி நடந்தான்.

பின் பனிக்காலம் நகர்ந்து இளவேனிலுக்கு வழி விட்டது. கல்லூரியின் மாகஸின் வெளிவந்தது. ஆலமர விழுதுகளுக்குக் கீழே சிமெண்ட் பெஞ்சில் பத்மா அமர்ந்து அதைப் பிரித்தாள். முதல் பக்கத்தில் ஆங்கிலப் பகுதியின் எடிட்டர் தெய்வ பிரகாஷ் என்றும் தமிழ்ப் பகுதியின் தொகுப்பாளர் இரண்டாவது ஆண்டு மாணவர் ராம்குமார் என்றும் இருந்தது. இருவரின் புகைப் படங்களும் வெளியாகி யிருந்தன.

பாஸ்போர்ட் சைஸில் இருந்த ராம் குமார் புன்னகையுடன் பத்மாவைப் பார்த்தான். பத்மாவின் இதழ்கள் பதிலுக்குப் புன்னகை செய்தன. பக்கங்களைத் தள்ளினாள். சுப்பையாவின் அறுவைத் துணுக்குகள் அங்குமிங்குமாக இருந்தன. அவற்றிலொன்று:

பத்திரிகை ஆபீஸில் கம்பாஸிட்டராக இருந்து வேலையை இழந்த ஒருவன் ஒரு ஓட்டலில் சப்ளையராகச் சேர்ந்தான். அவனைப் பார்த்து சூப் சாப்பிட்டுக் கொண்டிருந்த ஒருவர் ''யோவ் என்னய்யா இது சூப்ல எறும்பு கிடக்குது எடுத்துட்டுப் போய்யா'' என்று இரைந்தார். அவரிடம் பணிவாகச் சென்ற அந்தப் புது சப்ளையர் ''சார் மன்னிக்கணும். அது அச்சுப் பிழை. எறும்பு இல்லே. எலும்பு'' என்றான்.

பத்மா சிரித்துவிட்டு மேலும் புரட்டினாள். கடைசிப் பக்கத்தில் 'மௌனத்தில் பேசி' என்ற தலைப்பில் ராம்குமார் கட்டுரை எழுதியிருந்தான். அதைத் திரும்பத் திரும்ப வாசித்தாள்.

'சூரியனின் கதிர் பனித் துளியை முத்த மிடும்போது அதன் ஆன்மா வானவில்லின் வண்ணங்களால் ததும்புகிறது. அந்தக் கணத்தில் பனித் துளியின் வாழ்க்கை முழுமை பெற்று விடுகிறது. அப்புறம் வாழ்வின் இலட்சியம் நிறைவேறிய மகிழ்ச்சியோடு அது ஆவியாகிறது. எனவே பனித் துளியின் வாழ்க்கை முழுமையடைவதும் முடிவடைவதும் சூரிய ஒளியினால்தான். காதல் இல்லாமல் மனித வாழ்க்கை முழுமை பெறுவதில்லை. காதலை அனுபவித்தவன் மரணத்தைத் தழுவ அஞ்சுவதில்லை' என்று ஒரு பாராவில் எழுதியிருந்தான்.

''நாம் மௌனத்தில் பேசிடுவோம்
மரணத்தில் கூடிடுவோம்''

என்று லெபனான் தேசத்துக் கவிஞன் காலீல் ஜிப்ரானின் வரிகளோடு கட்டுரையை முடித்திருந்தான்.

அந்த ஜிப்ரானின் வரிகள் கல்வெட்டைப் போல் அவனுள் பதிந்தன. பனி மேகமாக இருந்த அவன் மனம் பாறுங் கல்லெனக் கனத்தது.

(தொடரும்)





# பிலிப்ஸ் க்வார்ட்ஸ் கண்ட்ரோல் க்ளாக் ரேடியோ
# இது க்ளாக் மற்றும் ரேடியோ இவற்றின் இணைப்பு மட்டுமல்ல...

கூடுதல் சிறப்புகள் பல கொண்டதாகும்.






**படுக்கையறைக்கு ஒரு அழகுப்பொருள்**

படுக்கையில் படுத்தவாறே இசையை அனுபவியுங்கள் (உங்களுக்கென்றே ஒரு தனி சுகம்!). இது தானே நிறுத்திக் கொண்டு, காலையில் தானே இயங்கி உங்களை எழுப்பும்.



**வரவேற்பறையில் பல நிகழ்ச்சிகளை வழங்குவது**

சக்திவாய்ந்த MW மற்றும் SW செட் ஆகிய இது பட்டனைத் தட்டிய மாத்திரத்தில் உலக நிகழ்ச்சிகளை ஒலிபரப்புகிறது.



**சமையலறையில் ஒரு உதவிப்பொருள்**

பல்வேறு வேலைகளைச் செய்யும்போது சுவையான ஒலிபரப்பு நிகழ்ச்சிகளை வழங்குகிறது. குழந்தையைப் பள்ளியிலிருந்து அழைத்து வருவது போன்ற முக்கிய வேலைகளை "பஸ்ஸர்" மூலம் நினைவூட்டுகிறது.



**நம்பகமான உதவியாளர்**

அலுவலகம், தொழிற்சாலை, கடை, வியாபார நிறுவனம்—எங்கிருந்தாலும் சரி—உங்களை நேரந்தவறாது பொறுப்புடன் செயல்படுத்த உதவி செய்து, திறமை வாய்ந்தவரென பெயரெடுத்துக் கொடுக்கிறது.



**பரிசளிக்க உன்னதமான பொருள்**

மனநிறைந்து செயல்படுவதைப் புரியவைக்க சிறந்த வழி! நிகழ்ச்சிகளையும் ஒலிபரப்புகிறது. அதே சமயம் புத்திசாலித்தனமாக நேரத்தைத் திட்டமிட்டு செயல்பட உதவுகிறது.

பிலிப்ஸ் க்வார்ட்ஸ் கண்ட்ரோல் க்ளாக் ரேடியோ, சக்தி வாய்ந்த ஒரு MW/SW செட் மற்றும் கனகச்சிதமான க்வார்ட்ஸ் கண்ட்ரோல் க்ளாக்கின் இணைப்பு மட்டுமல்ல... கூடுதல் அம்சங்கள் பல கொண்டதாகும். உதாரணமாக:

- கண்ணயர்ந்து விட்டாலோ தூங்கி விட்டாலோ அதைத் தானே நிறுத்திக் கொள்ள 'செட்' செய்து விடலாம் (கேட்கும் இசையே உங்களைத் தாலாட்டி விட்டாலும் கவலை இல்லை அல்லவா?)
- இசையுடன் இணைந்த அலாரம் உங்களைக் காலையில் எழுப்புகிறது. தொட்டால் போதும்—நீங்கள் மேலும் பத்து நிமிடங்கள் தூங்கலாம்.
- நாள் முழுதும், உங்கள் அலுவல்களை நினைவூட்டிக் கொண்டிருக்கும், (குழந்தையைப் பள்ளியிலிருந்து அழைத்து வருவது, லஞ்ச் அல்லது மீட்டிங் நேரம் முதலியவை)
- ரேடியோ மற்றும் அலாரத்தை முன்கூட்டி 'செட்' செய்து செய்திகளையோ உங்களுக்குப் பிடித்த நிகழ்ச்சிகளையோ கேட்கலாம்.

பிலிப்ஸ் க்வார்ட்ஸ் கண்ட்ரோல் ரேடியோவை மேலும் மேலும் உபயோகப்படுத்தும் போது நீங்கள் ஒப்புக்கொள்வது...அது பல சிறந்த அம்சங்கள் கொண்ட ஒரு எலெக்ட்ரானிக் அதிசயம் என்பதே. அழகு மற்றும் அறிவின் இணைப்பு.

**பிலிப்ஸ்**

வழங்குவோர் பிலிப்ஸ்.
50 ஆண்டுகளுக்கும் மேலாக
இந்தியாவில் இல்லங்களெல்லாம்
முழங்கும் நம்பகமான பெயர்

PHILIPS

CASPR-929-203 TAM

ரவிக்கையைப் பற்றி அவன் இழுத்த வுடன் மெலிதான துணி சர்ரென்று கிழிந்து அவளின் இரு...

மன்னிக்கவும். உடனடியாக உங்களைக் கதைக்குள் கொண்டு வருவதற்காகவே இந்த ஆரம்ப வாக்கியம். மற்றபடி நமக்கும் அவளுக்கும் எந்தவித ரத்த சம்பந்தமும் இல்லை.

கடைசி பாராவில் சின்ன சஸ்பென்ஸும், அடுத்த வார முதல் பாராவில் 'சப்பென்ஸ' மாய்க் குறைந்த பட்சம் நான்கு வாரங்கள் தொடர் கதையாகக் கொடுக்க வேண்டிய



என் வீர சாகஸப் பின்னணியை ஒரு அவசரம் காரணமாய் அடுத்த பாராவில் திணிக்கிறேன்.

நான் நரேந்திரன். இருபத்தி எட்டு. மார்பெலும்பில் துவரம் பருப்பு மச்சம். வலது கீழ்க் காலில் கண்டு விரல் நீளத்துக்கு சுடுகாடு மட்டும் தொடரப் போகிற தழும்பு. செமஸ்டர் முறை வருமுன் எம். ஏ. ஆங்கில இலக்கியம்.

அம்மா, தங்கை, தொழில், கழுகுக் கண்.

இப்போதைய அவசரத்திற்குக் காரணம்... இதோ ஆட்டோ... ஒரு பெண்.

''ஆட்டோ....''

''எங்க சார்...?''

''லஸ்... சாந்தி விஹார்...''

'அழகான' என்ற பிரயோகத்திற்கு உங்கள் கற்பனை எட்டுகிற எவரெஸ்ட்டிற்கு மேல் இன்னொரு எவரெஸ்ட் வைக்கிற அளவு அழகான பெண். முக்கியமாய் எனக்காகக் காத்திருக்கிற பெண்.

'ட்டிங்' என்ற அலுப்புடன் கொடி மடங்கிற்று. டிரைவர் நியூட்ரலுக்குக் கொண்டு வராமல் ஸ்டார்ட்டரைப் பலங் கொண்ட மட்டும் தூக்கினதில் ஆட்டோ சந்திரனைத் தொட்டுத் திரும்பியது.

''என்னப்பா...?'' என்றேன் உண்டியல் காசாய்க் குலுங்கி.

''ஹி...ஹி... ஒண்ணுமில்ல சார்...''

கலைந்த தலையை நான் சரிபண்ணிக்கொண்டிருக்கையில் ஆட்டோ சர்ரக்கென்று நெருப்புக் குச்சி பற்றின மாதிரி கிளம்பியது.

அன்றுட அரிசிக்கும், என் சட்டை பாண்ட்டுக்கும் சாராய வாசத்திற்கும் இந்த ஆட்டோவில் பிரயாணிக்கவும் மாதா மாதம் சில்லறை போடுகிறவர் ராம்தாஸ், சுருக்கமாய் தாஸ். Eagle's Eyeயின் ஏகபோக மூலவர்.

Eagle's Eye. நீங்கள் நாலு இலக்கங்களை மறந்துவிடத்தயாராய்இருந்தால் ஒரேவாரத்தில் சந்திரகுப்தமௌரியர் எழுதிவைத்த உயிலைக் கூடத் தோண்டி எடுப்போம். இதுதவிர அவ்வப்போது காக்கி உடுப்புகளுக்கு உபயமாய்க் கொஞ்சம் சாகஸங்கள். போனவாரம் ஒரு காரைத் துரத்தி என் புல்லட் மரைத்த முத்தமிட்டு மெக்கானிக் ஷெட்டில் உறுப்பு உறுப்பாய்ப் பரவிக் கிடக்கிறது. எனவே ஆட்டோ!

நிஷாவை உங்களுக்கு அறிமுகம் செய்து வைக்கப் போவதில்லை.

மறைவாய்நின்றுபார்த்துக்கொள்ளுங்கள்.

நிஷா எனக்கு எப்படி அறிமுகமானாள்?

''நிஷா'' என்றார் ராம்தாஸ், முன்பே சொன்ன என் முதலாளி.

பத்துப் பன்னிரண்டு முயற்சிகளுக்குப் பின் 'குப் குப்' என்றது பைப்பில் புகையிலை.

''எந்த காலேஜ் பாஸ்?'' என்றேன்.

''பிரஸிடென்ஸி...''

''அவளை...?''

''அவளை ஆராயாதே.''

''ம்!?'' என்றேன் நிமிர்ந்து, ஆச்சரியத்துடன், கேள்வியுடன்.

''ராம்குமார்னு ஒரு பையன்.''

''நிஷாவோட ப்ரதர்?''

''லவர்.''

எனக்குள் ஒரு சின்ன சடா முடா சத்தம். ஆர்வம் முறிகிற ஒலி.

''ரிப்போர்ட்ஸ் ஆன் ஹிம்?''

''ஆமா... சுத்தமா வேணும்... யார் அந்தப் பையன்? அவன் பின்னணி என்ன? நிஷா அவன் கிட்ட எப்படி மாட்டிக்கிட்டா.. அவனுடை பலவீனப் புள்ளி எது? எப்படி அவளை நிஷா கிட்டேர்ந்து பிரிக்கலாம். கடைசி வரியை மனப் பாடம் பண்ணிக்க.''

''பார்ட்டி யாரு தாஸ்?''

''நிஷாவோட அப்பா.''

''அப்பா காதல் எதிரியா?''

''ஒரே பொண்ணு... செல்லப் பொண்ணு. அப்பாவால மாத்த முடியாத பொண்ணு... நாமதான் மாத்தணும்... அஞ்சு நாள் டயம்''

''காதலைப் பிரிக்கிறது பாவம் தாஸ்.''

''அப்புறம் வயத்துமேலே நீயும், நானும் ஈரத் துணிதான் போட்டுக்கணும்.. ஃபியட் எம். ஆர். எஸ். 9148... மரூன்.. ப்ரெஸிடென்ஸி காலேஜ்...''

அங்கேதான் அறிமுகமானாள்.

ஐந்து மூன்று. சரிந்த தோள்கள். சற்றுத் தாழ்ந்த மார்புகள். குழைந்து விரிகிற இடை. நடையில் மிகக் கவனித்தால் தென்படுகிற சின்னத் துள்ளல். நீளமான புருவங்கள். கண்கள்கயல்கள்.விழிகள் பால்திராட்சைகள். கன்னத்தில் நிரந்தரச் சின்ன அதிர்ஷ்டம்.

நிஷா! தனியே வந்தாள். முகத்தில் சின்ன குறும்பு தெரிந்தது. பரபரப்புத் தெரிந்தது.

''நிஷா?''

கார்க் கதவிலிருந்து சட்டென்று கையை எடுத்து நிமிர்ந்தாள்.

''யா'' என்றாள். பார்வையில் புழுவைத் தரிசனம் செய்கிற பாவம்.

''உங்களுக்காகத்தான் வெயிட் பண்றேன்.''

''எனக்காகவா?''

''ஆமாம்... மிஸ்டர் வெங்கட்ராமன் உங்களைப் பார்க்கச் சொன்னாரு.''

''அப்பாவா?''

திருநெல்வேலி மருத்துவக் கல்லூரியைச் சேர்ந்த பெண்கள் ஹாஸ்டலுக்கு இளவரசிகள் வீடு (House of Princess) என பெயர் சூட்டியிருக்கிறார்கள்.

—எஸ். முகம்மது யூசுப்



''திருவான்மியூர் கிரவுண்டை பாங்குக்கு விக்கலாம்னு ஒரு ஐடியா.. அதனாலதாங்களை உடனே கூட்டிக்கிட்டு வரச் சொன்னார்.''

''நீங்க?''

''ஐ ஆம் ஸாரி... நான் நரேந்திரன். நம்ம நிஷா இன்டஸ்ட்ரீஸ்ல லீகல் டிபார்ட்மெண்ட்ல ஒரு சீனியர் பொஸிஷன். கிரவுண்டு உங்க பேரிலே இருக்கு. அதனால உங்க கையெழுத்துத் தேவையா இருக்கு... அதனால உடனே கூட்டிக்கிட்டு வரச் சொன்னார்.''

இந்த மாதிரி சமயங்களில் ஆயிரம் வேஷங்கள். அவள் அப்பா கம்பெனியில் சேருவதுதானா பெரிது?

நிஷாவின் கண்களில் பதற்றம் தெரிந்தது. சட்டென்று வாட்ச்சைப் பார்த்தாள்.

''நாளைக்கு வச்சுக்கலாமே... இப்ப எனக்கு அர்ஜண்டா ஒரு வேலை இருக்கு.''

''பார்ட்டி வந்து வெயிட் பண்றாங்க மேடம்.''

பார்ட்டி இந்நேரம் வந்திருக்க வேண்டும். சும்மா சொல்லக் கூடாது. அந்த ஆள் வெங்கட்ராமன் எல்லாவற்றிற்கும் தலையாட்டியிருந்தார்.

''சரி, நீங்களும் கார்ல ஏறிக்கிங்க. போற வழியில ஒருத்தரைப் பார்த்துட்டுப் போயிடலாம்.''

**ம**றுநாள் குடியரசு தினத்தில் சல்யூட் அடிக்க தெருவெல்லாம் போலீஸ் ஒத்திகை.

ஆல் இண்டியா ரேடியோவுக்கு எதிரில் அவன் நின்றிருந்தான். நெடு நெடுவென்று ஆறடி. தூக்கி வாரிய முடி. சற்று அகலமான நெற்றி. தடிமனான புருவங்கள். பிரவுன் கலர் சட்டையை வெள்ளைப் பாண்டுக்குள் செருகி பம்பரச் சாட்டை மாதிரி மெல்லிசாய்ப் பெல்ட் இறுக்கியிருந்தான்.

''ராம்... காரில ஏறிக்கயேன். போய்ட்டே பேசலாம்.''

ஸ்டியரிங்கிலிருந்து நகர்ந்து என்புறம் ஒதுங்கினாள். ராம்(குமார்) குனிந்து உடலை ஸ்டியரிங்கிற்கு அடியில் திணித்தான்.

''நான் வேணா பின்னால போயிடவா'' என்றேன் பெருந்தன்மையாய்.

''இட்ஸ் ஓ.கே.... மீட் ராம்குமார்...'

''ஹலோ... ஐ'ம் நரேந்திரன்''

''ஹாய்....'' என்றான். ''எங்கே?''

''எங்கே''' என்றாள் என்னிடம்.

''அடையாறு ஆபீஸுக்கு.''

கார் கிளம்பிற்று. அதுதான் ஆரம்பம்.

அப்புறம் நான் நினைத்துக் கொண்டாற் போல திரு. வி. க. பாலம் வந்தவுடன் ''சரி... அப்பா கிட்ட நான் அட்ஜஸ்ட் பண்ணிக்கறேன்... நாளைக்குக் கையெழுத்து போடுங்க, போதும்...ஐ டோண்ட் வாண்ட் டு டிஸ்டர்ப் யூ டு டே....'' என்று விலகிக் கொண்டதும், ஏதோ ஒரு சின்ன நொண்டிக் காரணத்துடன் நிஷாவைப் பார்க்க மூன்று நாட்கள் போனதும், எனது கண்ணியமும், நடவடிக்கைகளும் 'சின்ன 'ஏ' ஜோக்குகளும் (யானை டோக்கன்) அவளுக்குப் பிடித்துப் போக, அவளின் நெருங்கிய வட்டத்தில்



சோதிடர்: உங்களுக்கு என். டி. ராமராவைப் போல் அதிர்ஷ்டமிருக்கு!
நடிகர்: முதலமைச்சராவதற்கா?
சோதிடர்: இல்லே, சன்னியாசியாவதற்கு!

ஆர். சுப்பு

என்னைச் செருகிக் கொண்டதும்... வேண்டாம், உங்களுக்குப் போரடிக்கும்.

**ஐ**ந்தாம் நாள்.... நேற்று.

'சொல்லு நரேன்...' என்றார் முதலாளி நேராய் என்னைப் பார்த்து.

'ரிப்போர்ட் ரெடி பாஸ்... நாளைக்கு எல்லாம் வெடிச்சுடும்.'

'குட்' என்றார் ராம்தாஸ்.

**இ**ன்று சாந்தி விஹாரில் ஆட்டோ நின்றதும் இறங்கினேன். உள்ளே போனேன். முதல் நாள் நிஷாவோடு வந்தது நினைவில் இடறிற்று. ஒரு அம்பாஸிடர் 'க்ய்ங்க்' 'க்ய்ங்கி' 'க்ய்ங்க்' என்று ரிவர்ஸ் எடுக்க முயன்றதில் பின்னால் நுழைந்த ஃபியட் ஹாரனை மிதித்துக் கொண்டிருந்தது. யானை மிதி. தவிர்த்து நடந்தேன். கண்கள் அலைந்தன.

நிஷா இல்லை. காத்திருக்க வேண்டியதுதான்.

காத்திருக்கும் நேரத்தில் காதைக் கொண்டு வாருங்கள், ஒரு ரகசியம் உடைக்கிறேன்.... ம்! ராம்குமாரை நிஷா காதலித்துக் கொண்டிருப்பதில் அவளின் அப்பாவுக்கு மட்டும் வருத்தம் இல்லை. எனக்கும்! காரணம் நிஷா!

ஜனவரி 25ம் தேதி மாலை 4 மணி 36 நிமிடம், 25 நொடியில் என் நரம்புகளின் அணுக்களை அசைத்த நிஷா, அந்த நொடியிலிருந்து இந்த நொடி வரை என் உடம்பின் ஒவ்வொரு புள்ளியிலும் வியாபித்திருக்கிற நிஷா. இவளிடம் ஏன் அனுவசியப் பொய்? மேலும் பொய்கள்? இன்றைய சந்திப்பில் இந்த வேதனை தீரப் போகிறது. நம்பினேன். இன்றைக்குச் சொல்லப் போகிறேன். உண்மையெல்லாம் கொட்டப் போகிறேன்.

சரேலென்று என் இமைகள் புருவங்கள் நிமிர்த்தின.

''ஓ ஸாரி நரேன்....'' என்றாள் அருகில் வந்தவுடன்,

என் புறங்கை வியர்ப்பதை, என் புன்னகை பிசகி, அசடும், பதற்றமும் தத்தளிப்பதை எனக்கே புரிந்து கொள்ள முடிந்தது.

''என்ன சாப்பிடுகிறீர்கள் நரேன்?''

''எனிதிங் ஆன் எர்த்...''

குனிந்து தரையைப் பார்த்தாள்.

''பூமி மேலே உடனடியா உங்க பக்கத்துல நான்தான் இருக்கேன்'' என்று அவளே சிரித்தாள்.

''ப்ரட் சானு?'' என்றாள்.

''ஓ.கே....''

மூன்று ரூபாய்க்கு 'கிர்ரக்' கிர்ரக்' என்று மிஷின் அடித்த டோக்கன் வாங்கி வந்தாள்.

பிளாஸ்டிக் ஸ்பூனில் எண்ணெய்ப் பசை இருந்தது.

''நான் ஒரு முக்கியமான விஷயம் பேசணும் நிஷா.''

''ஷூட்....''

''ராம்குமார் என்னிக்குப் பெங்களூர் லேர்ந்து வரான்?''

''அதான் முக்கியமா?''

''அவன் கூட சரளமா நீங்க பழகறதைப் பாத்தா எனக்குப் பயமாயிருக்கு.''

''என்ன பயம்?''

''அவனைப் பத்தி பூரா உங்களுக்குத் தெரியாது.''

''தெரியும்.''

''தெரியாது.''

''ஓ.கே. மிஸ்டர் Eagle's Eye'' என்றாள் திடுமென்று. தடால் தடால் என்று என் மார்பு அடித்துக் கொள்ள, அவள் ஒற்றைக் கண்ணைச் சிமிட்டி அகலமாய்ப் புன்னகைத்தாள்.

''ஸாரி நரேன்... நான் அப்படித் தடால்னு போட்டு உடைச்சிருக்கக் கூடாது. எனக்கு ராமைப் பத்தி எல்லாம் தெரியும். தாகம் எடுத்தா அப்பப்ப விஸ்கி சாப்பிடுவான். ஓகே... ஸ்மோக் பண்ணுவான்... ஓ.கே... அகேஷனலா எல். எஸ். டி போடுவான். ஓ.கே.... மல்லிகா கூடப் பழகிட்டு கட் பண்ண முடியாமத் தவிச்சுக்கிட்டு இருப்பான்.... ஓ.கே... பெங்களூர் லாட்ஜ் ரெய்ட்ல மாட்டிக்கிட்டான்... ஓ.கே... அதானே உங்க ரிப்போர்ட்ல் கிளிப் பிள்ளை மாதிரி சொல்லப் போகுது....''

பிரமிப்பு என் தொண்டையில் 'கார்க்' இட்டது.

இந்தியாவில் சம்ஸ்கிருத மொழியில் ஒரே ஒரு தினசரிப் பத்திரிகை மைசூரிலிருந்து வெளிவருகிறது.

'பாதுஷா'



''உங்க ரிப்போர்ட்டை நான் இன்னும் திருட்டுத்தனமாப் படிக்கலே. அத்தனையும் அவனே சொன்னது... ஒரு வரி விடாம...''

''தெரிஞ்சிருந்துமா அவனை....''

''தெரிஞ்சதாலேதான் அவனை... ஐ நோ ஹிம்... அவனை நான் மாத்திடுவேன்... அப்படியே அவன் மாறலேன்னாலும் நான் கவலைப்பட மாட்டேன். உடம்பை அவன் அழிச்சிக்கிறானே தவிர மனசைப் பொறுத்தவரைக்கும் எனக்கு..., எனக்கு மட்டும்தான் அது சொந்தம். ஐ லவ் ஹிம் ஸோ மச்... உங்க 'மூக்கு' இதிலே நுழைஞ்சதைப் பத்தியும் அவன்தான் எனக்குக் கண்டு பிடிச்சுச் சொன்னான். என் மனசையா மாத்த ட்ரை பண்றீங்க, தப்பான எடத்துக்கு வந்துட்டீங்க நரேந்திரன்... சாப்பிடுங்க... ப்ளீஸ்....''

தட்டு நிறைய அக்கினி திராவகத்தை ஊற்றி முன்னே நீட்டுகிற மாதிரி இருந்தது எனக்கு. எவ்வளவு தூரத்திற்கு முட்டாளாகி இருக்கிறேன்.

''சமான்... மறந்துடுங்க நரேன். நான் ஒரு முக்கியமான விஷயம் சொல்லப் போறேன்னு சொன்னேன்.''

''சொல்லுங்க.''

''அப்பாவுக்கு இப்ப நீங்க க்ளோஸ் தானே.''

''ம்.''

''நீங்கதான் எனக்கு ஹெல்ப் பண்ணணும். உங்ககிட்டத்தான் அவரு நம்பிக்கை வச்சிருக்காரு... எப்படியாவது அப்பா மனசிலே ராம்குமாரைப் பற்றின ஒரு நல்ல ஒப்பீனியனை ஏற்படுத்தணும். உங்களுக்கு நான் டபுள் த ஃபீஸ் தரேன் நரேன்......''

தொண்டை கமறிக் கண்களில் லேசாய்ப் பளபளப்புத் தெரிய, நான் பேச முடியாமல் பார்த்திருந்தேன்.

''உங்களைத்தான் நம்பியிருக்கேன் நரேன். ப்ளீஸ்...'' என்று என் கையைப் பிடித்துக் கொண்டாள். என் கைகளில் விர்ரென்று ஒரு சிலிர்ப்பு. இவளுக்காக இவளின் இந்தக் கண்களுக்காக எந்த உயரத்திலிருந்தும் குதிக்கலாம் என்று தோன்றிற்று. லேசாய்ப் பார்வை மங்கிற்று. அழுகிறேனா என்ன? சேச்சே... என்ன இது?

என் மற்ற உணர்வுகள் வடிந்து அழுந்த, அவள் கையை மெல்லத் தட்டிக் கொடுத்தேன்.

''நான் உங்கப்பா கிட்டப் பேசறேன், நிஷா....''

நிச்சயமாய் நான் இதைச் செய்ய வேண்டும். எப்படி? தெரியாது. ஆனால் செய்யப் போகிறேன். இனி ஒவ்வொரு நொடியும், அதன் பின்னரும் இந்த எண்ணத்தின் உந்துதலில்தான் நகரும்.

நிஷா முகம் மலர்ந்து சிரித்தாள்.

''தாங்க்யூ'' என்றாள் வரிசைப் பற்கள் மின்ன.

''நெக்ஸ்ட் என்ன... காஃபியா டீயா''? என்றாள்.

''மூணு வேளை 'டும்டும்' சாப்பாடு...'' என்றேன்.

# சிவாஜிராவின் இளமைப்பருவம்

**திரைப்படத்தில் ஹீரோவாக நடிக்கும் ரஜினி வாழ்க்கையில் பல சந்தர்ப்பங்களில் வில்லனாகத்தான் விளங்கியிருக்கிறார்!**

ரஜினிகாந்திற்குத் தாய் தந்தையர் இட்ட பெயர் சிவாஜி ராவ் கெய்க்வாட். வீட்டில் அனைவரும் அவரைச் சத்திரபதி என்றுதான் அழைப்பது வழக்கம். அவருக்கு ஒரு தங்கையும் இரு சகோதரர்களும் உண்டு.

சிறுவன் சிவாஜிக்கு ஏழு வயதாகும்போது அன்னை ராம்பாய் கண்ணை மூடிவிட்டார்.

அப்போது சிறுவன் சிவாஜி ராவ் சாவுக்கு வந்திருந்த யாரோ ஒருவரின் சைக்கிளைத் தூக்கிக் கொண்டு தன் சிநேகிதப் பட்டாளத்தோடு ஜோராக சைக்கிள் விட்டுக் கொண்டிருந்தான்.

அண்ணன் சத்தியநாராயண ராவ்தான் ஓடிவந்து சிவாஜி ராவை உள்ளே அழைத்துச் சென்று தாயின் உடலைக் கிடத்தியிருக்கும் இடத்தில் கொண்டு போய் நிறுத்தி ''அம்மா இறந்துட்டாங்கடா சிவாஜி'' என்று கூறித் தம்பியைக் கட்டிப் பிடித்துக் கொண்டு 'ஓ' வென்று அழுதார். ஆனால் அப்போதும் அதன் முழு அர்த்தத்தையும் புரிந்துகொள்ள முடியாத சிவாஜி ராவ் தாயாரின் மீது போடப்பட்டிருந்த ஒரு ரோஜாப் பூவை எடுத்துத் தன் சட்டையில் குத்திக்கொண்டு வெளியே ஓடிவிட்டான்.

சிறுவன் என்ற நிலை மாறி இளைஞனாகத் தான் மாறியிருப்பதை உணர்ந்த சிவாஜி ராவ் இளமையின் முதிர்ச்சியை அதிகமாக்கிக் காட்டப் பெரிதும் விரும்பினான்.

வளராத அரும்பு மீசையை மை தடவி வளர்க்க ஆரம்பித்தார். சிகரெட் பிடிக்கவும் ஆரம்பித்தார்.

காலையில் நண்பர்களையெல்லாம் சேர்த்துக் கொண்டு சாலை ஓர மதில் சுவரில் ஏறி அமர்ந்து கொள்வார். அந்தப் பக்கமாகப் போகும் பெண்களைக் கிண்டல் செய்வார். ஒரு பெண் மீது சிறு கல்லை எடுத்து எறிவார். அவள் திரும்பிப் பார்த்தால் கண் அடிப்பார். திரும்பாமலே போனால் அவள் பின்னாலேயே துரத்துவார். ஒரு சமயம் இப்படித்தான் ஒரு பெண்ணைக் கிண்டல் செய்தபோது அந்தப் பெண் திரும்பிப் பார்க்காமல் காரித் துப்பிவிட்டுப் போய்விட்டாள். சிவாஜி ராவுக்கு அது ஒரு சவாலாகத் தோன்றவே எப்படியாவது அவளை இரண்டு பர்லாங் தூரத்துக்குள் மடக்கிப் பேசி விடுகிறேன் என்று கூறிவிட்டு நண்பர்கள் புடைசூழ அவளைத் துரத்திக் கொண்டு போனார்.

அவள் வழியிலிருந்த ஒரு திருமண மண்டபத்திற்குள் புகுந்து போலீசுக்குப் போன் செய்ய, போலீஸ் ஜீப் வந்து காவலர்கள் சிவாஜி ராவையும் அவரது நண்பர்களையும் ஏற்றிக் கொண்டு போலீஸ் ஸ்டேஷனுக்குக் கொண்டுசென்றார்கள். ஹெட் கான்ஸ்டேபிள் ராணோஜி ராவ் சிறந்த சேவை செய்ததற்காக அரசாங்கப் பரிசு பெற்றவர். அவரது கடைசிப் பையனே ஒரு பெண்ணைத் துரத்திச் சிறையில் மாட்டிக் கொண்டார்.



கடையில் கெஞ்சிக் கூத்தாடி விடுதலையாகி வீட்டுக்கு வந்தார் சிவாஜி ராவ்.

அதன் பின்னர் பெற்றோர்களின் வற்புறுத்தலுக்காக பி. யூ. சி. வகுப்பில் சேர்ந்தார். சில மாதங்கள்தாம் கல்லூரியில் படித்தார். ஒரு தடவை பீஸ் கட்டுவதற்காகக் கொடுத்த இருநூறு ரூபாயை எடுத்துக் கொண்டு சென்னைக்கு இரயிலேறிவிட்டார்.

சென்னைக்கு வந்த சிவாஜி ராவ் நடிப்பதற்கு சான்ஸ் தேடி அலையவில்லை. ஏதாவதொரு வேலையில் அமர்ந்து காலத்தை ஓட்ட முயன்றார்.

எங்கெங்கோ அலைந்து திரிந்தும் அவருக்கு நிரந்தர வேலை கிடைக்கவில்லை. பலவித கூலி வேலைகள் செய்தார். ஓர் இரவு லாக் அப்பில் கழித்தார்.

பட்டினியும், பிளாட்பாரப் படுக்கையுமாக எத்தனை நாட்கள் காலம் தள்ள முடியும்? பெங்களூருக்குப் போய்ச் சேரவும் பணம் இல்லை. வருவது வரட்டும் என்று திருட்டு ரயில் ஏறிச் சீட்டுக்கடியில் படுத்தார்.

வீட்டில் அவரை மதிக்கவில்லை. அக்கம் பக்கத்திலும் மரியாதை இல்லை. சில்லறை வேலைகள் செய்தார். லாரி ஷெட் ஒன்றில் மூட்டை தூக்கும் வேலையில் சேர்ந்தார்.

அறுபது மூட்டை நாட்டிக் கொடுத்தால் இரண்டு ரூபாய் கூலி கிடைக்கும். 180 மூட்டை 'நாட்டி'க் கொடுத்து ஆறு ரூபாய் சம்பாதித்து விடுவார். அப்புறம் ஜாலிதான். சென்னையிலிருந்து வரும் பெரிய லாரி டிரைவர்களோடு சேர்ந்து சாராயக் கடைக்குப் போய் சாராயமும் குடிக்க முற்படுவார்.

### பிள்ளை பெத்த அணை

நாகர்கோவிலிலிருந்து ஐந்து மைல் தூரத்தில் உள்ள தாமரைக்குளம் கிராமத்தில் பழையாற்றின் குறுக்கே கட்டப்பட்டுள்ள அணையின் பெயர் 'பிள்ளை பெத்த அணை''. சுமார் 150 ஆண்டுகளுக்கு முன் முதன் முதலில் இந்த அணை கட்டப்பட்டு வந்தபோது ஒரு தொழிலாளி வேலை புரிந்த இடத்திலேயே ஓர் ஆண் மகவைப் பெற்றாளாம். அதனால்தான் அணையின் பெயரும் பிள்ளை பெத்த அணை!

—ரமா ராமநாதன்



குடித்துவிட்டால் சிவாஜிராவுக்கு உலகமே தூசுபோலத்தான் தெரியும். ஆனால் அண்ணன் சத்தியநாராயண ராவைக் கண்டால் மட்டும் குலைநடுக்கம். அவர் முன்கோபக்காரர். தொட்டதற்கெல்லாம் அடிதான். நேரங் கழித்து வீட்டுக்கு வந்தால் சாப்பாடு கிடையாது. குடித்துவிட்டு வந்தால் தெருச் கோடியிலிருந்து வீட்டில் உள்ள ஒரு பெரிய தொட்டி நிறையத் தண்ணீர் நிரப்பி விட்டுத்தான் படுக்க வேண்டும். தண்ணீர் நிரப்புவதற்குச் சுமார் ஒரு மணி நேரம் ஆகும். தொட்டிக்குப் பக்கத்திலேயே படுத்து உறங்கி விடுவார்.

ஒரு சமயம் சிவாஜி ராவின் நண்பர்கள் அனைவரும் 'நாடோடி மன்னன்' படத்தைப் பார்க்கக் கிளம்பினார்கள். அவரிடமோ பணம் இல்லை.

வீட்டிலிருந்து ஒரு வெள்ளி டம்ளரைத் திருடிக் கொண்டுபோய் மார்வாடிக்கடையில் ஐந்து ரூபாய்க்கு அடகுவைத்துவிட்டு தியேட்டரை நோக்கிச் சிட்டாய்ப் பறந்தார்.

''எம். ஜி. ஆர். மாதிரியே 'ஜம்ப்' பண்ணிக் கியூவிற்கான குட்டிச் சுவரில் ஏறிக் குதித்து டிக்கட் கொடுக்கிற இடத்துக்கு முன்னால் போய் நிற்பேன்.

''டிக்கட் வாங்கிட்டுத் தியேட்டருக்குள் போனதும் அமைதியாக உட்கார மாட்டேன். அப்படியே ரவுண்டு சுத்தி வருவேன். அதிகமா மல்லிகைப் பூ வாசனை வர்ற இடமாகத் தேடிப் பிடிச்சுத்தான் உட்காருவேன்.

''எம். ஜி. ஆர். திரையில் தோன்றியதுதான் தாமதம். எழுந்து நின்று உய் உய் என்று விசிலடித்துக் கையில் இருந்த சில்லறைக் காசை எல்லாம் திரையை நோக்கி வீசி எறிவேன்'' என்கிறார் ரஜினி காந்த்.

ஒரு நண்பர் மூலம் கே. டி. சி. எனப்படும் கர்நாடகா டிரான்ஸ்போர்ட் கார்ப்பரேஷனில் கண்டக்டர் வேலை கிடைத்தது.

பஸ் பயணிகளுக்குக் கொடுக்கும் டிக்கெட்டை அவர்கள் இறங்கிச் செல்லும் போது கேட்டு வாங்கிக் கொள்வார். பின்னர் அதே டிக்கட்டை மற்றொரு பயணிக்குக் கொடுப்பார். இதே போல நாள் முழுக்கச் செய்து சுமார் நூறு ரூபாய்க்கு மேல் திருட்டுத்தனமாகச் சம்பாதித்து விடுவார்.

ஒரு நாள் கல்லூரி மாணவி ஒருத்தியின் டிக்கெட்டை சிவாஜி ராவ் திரும்பக் கேட்ட போது அவள் கொடுக்க மறுத்துக் கிழித்துப் போட்டு விட்டாள். மறு நாள் அவள் நின்ற ஸ்டாப்பில் பஸ்ஸை நிறுத்தாமல் டபுள் விசில் கொடுத்து விட்டார். கல்லூரிக்குச் செல்லக் காலையில் அதுதான் கடைசி பஸ். அதற்கு அடுத்த மூன்று நாளும் அதே கதைதான். அடுத்த நாள் அந்தப் பெண் சிவாஜி ராவோடு சமரசத்துக்கு வந்து விட்டாள். சிவாஜி கேட்காமலே டிக்கெட்டைக் கொடுத்து விட்டாள். டிக்கெட்டை மட்டுமா? சில நாட்களில் தன்னையே கொடுத்து விட்டாள்.

சாராயக் கடையில் காசு கொடுக்காமலேயே குடிப்பார். காசு கேட்டால் அடிப்பார். அந்தப் பகுதியே அவரைக் கண்டால்

நடுங்கும். அவரது வீட்டுக்குப் பக்கத்துத் தெருவில் சில நாயுடு இளைஞர்கள் இருந்தார்கள். அவர்களுக்கு ஒரு தங்கை. மிகவும் அழகானவள். அவள் மீது சிவாஜி ராவுக்கும் அவரது நண்பர்களுக்கும் ஒரு கண்.

அவளை ஒரு நாள் வழியில் மடக்கி நான்கு வார்த்தை பேசிவிட்டார் சிவாஜி. அவளோ தன் அண்ணன் மாரிடம் விஷயத்தைச் சொல்லி விட்டாள். அதன் பிறகு என்ன நடந்தது? ரஜினி காந்த் சொல்கிறார்:

''சைக்கிள் செயினை எடுத்துப் பாக்கெட்டில் விட்டுக் கொண்டு நடந்தேன். வெளி வராந்தாவில் வரிசையாகப் படுத்திருந்தானுங்க, அவள் அண்ணன்மாருங்க. தூங்கறவனை அடிக்கிறது கோழைத்தனம் இல்லையா? அதனாலே ஒருவனைத் தட்டி எழுப்பி, ''டேய் பொட்டைப் பசங்களா, நான் சிவாஜி வந்திருக்கேன்டா. என்னவோ என் அண்ணனிடம் போய் 'கணக்குத் தீர்த்திடுவோம்'னு மிரட்டினீங்களாமே''ன்னு கேட்டேன். சைக்கிள் செயினை எடுத்து விளாசினேன். அவங்க அலறி ஓடினாங்க.

''அந்தப் பசங்க நாராயணன் என்ற ரௌடியை அழைச்சிக்கிட்டு என் வீட்டுக்குப்போய் மறுபடி மிரட்டி யிருக்காங்க.

''நாராயணன் பெரிய பிஸ்தா. அவன் பெயரைக் கேட்டாலே எல்லாரும் நடுங்குவாங்க. சின்ன பிரதர் என் கிட்டே வந்து ''தம்பி, நாராயணன் என்னை அடிச்சுட்டான்டா'' என்றார். எனக்கு ஆத்திரத்தில் முகமெல்லாம் சிவந்து போச்சு.

''சிட்டி மார்க்கெட்டுப் பக்கம் வேகமாகச் சென்று என்னுடைய மாமூல் சாராயக் கடைக்குப் போனேன். நாலு கிளாஸ் ஊத்திக்கிட்டேன். நாராயணன் ஓட்டலுக்கு வெளியே பெஞ்சில் உட்கார்ந்து மஜாவாப் பேசிக்கிட்டிருந்தான்.

''டேய் நாராயணா'ன்னு பாஞ்ச நான் ''எங்க அண்ணனை அடிச்சியாடா'ன்னு கேட்டுட்டு சைக்கிள் செயினை எடுத்துச் சுழற்றினேன். அவன் கூட இருந்தவங்க எல்லோரும் ஓடிப்போயிட்டாங்க. நாராயணன் அடி தாங்க முடியாம எழுந்து ஓடினான். நான் துரத்தினேன். அவன் பக்கத்தில் இருந்த குஜிலி மார்க்கெட்டுக்குள்ளாறப் புகுந்துட்டான். அதுக்குள்ள புகுந்துட்டா கண்டு பிடிக்க முடியாது.''

கண்டக்டர் சிவாஜி ராவ் பயணிகளுக்குக் கொடுத்த டிக்கெட்டையே திரும்ப வாங்கி மற்ற பயணிகளுக்குக் கொடுத்து நாள் ஒன்றுக்கு நூறு ரூபாய்க்கு மேல் சம்பாதித்து வந்ததைப் பற்றி யாரோ புகார் செய்து விட்டனர். சிவாஜி ராவைக் கையும் களவுமாகப் பிடிக்க ஏராளமான செக்கிங் இன்ஸ்பெக்டர்களை நியமித்தனர். அவர்களில் ஒருவர் சிவாஜி ராவைப் பிடித்து விட்டார்.

மறு நாள் அந்த செக்கிங் இன்ஸ்பெக்டரை செமத்தியாக உதைத்து விட்டார் சிவாஜி. அவர் மேல் பல கண்டக்டர்களுக்கு கோபம் இருந்தது. சிவாஜி ராவை 'தலைவரே' என அழைக்க ஆரம்பித்தனர்.

ஆனால் கே. டி. சி. நிர்வாகம் சும்மா விடுமா? சிவாஜியை சஸ்பெண்ட் செய்தது.

**பிரான்ஸில்...**

● லூவ்ர் ம்யூஸியத்தில் உள்ள மோனலிஸா சித்திரத்தைப் பார்க்கப் போகும் இடத்திற்கு அருகில் பத்து பிராங்க் வாடகைக்கு ஒரு கருவி தருகிறார்கள். அந்தக் கருவியுடன் மோனலிஸா சித்திரம் அருகே வந்தவுடன் கருவி தானே பேசத் தொடங்கியது. மோனாலிஸா யார், என் வரையப்பட்டாள் எப்போது, எங்கு போன்ற பல விஷயங்கள். எல்லாம் மோனாலிஸா சித்திரத்திற்கு பத்து அடிக்குப் பத்தடி தூரம்தான். எல்லாம் ரேடியோ அலைகள். குறிப்பிட்ட இடத்தைக் கடந்தால் கருவி பேசுவதை நிறுத்துகிறது.




**ஹாலந்தில்...**

● ஒவ்வொரு வீட்டின் முன்னாலும் ஒரு கொடிக் கம்பம் இருக்கும். எந்த வீட்டில் மகிழ்ச்சிகரமான விஷயங்கள் நடக்கின்றதோ அந்த வீட்டில் தேசியக் கொடியை ஏற்றி வைத்து மகிழ்ச்சியை ஊருடன் பங்கு கொள்வார்கள்.

எஸ்.-சத்தியமூர்த்தி எழுதிய 'மூன்று நாடுகளில் முந்நூறு நாட்கள்' என்ற புத்தகத்திலிருந்து
வெளியீடு: புத்தகப் பூங்கா, சென்னை 14

—இல்லப்பா

செயின் ஸ்மோக்கரான சிவாஜிராவ் வீட்டில் இருக்கும்போது அப்பாவுக்கும் அண்ணனுக்கும் தெரியாமல் சிகரெட் பிடிப்பார்.

ஒரு நாள் இவர் ஜாலியாக தம் அடித்துக்கொண்டிருந்தபோது திடீரென்று அவருடைய அப்பா வந்து விட்டார். அதைக் கண்ட சிவாஜி ராவ் 'லபக்' என்று சிகரெட்டை வாய்க்குள் தள்ளி விட்டார். அதுதான் இன்றைய ரஜினி காந்தின் வித விதமான சிகரெட் ஸ்டைல்களுக்கு வித்திட்ட சம்பவம்.


நன்றி: மணிமேகலைப் பிரசுரம் வெளியிட்ட
''ஸ்டைல் மன்னன் ரஜினிகாந்த்''
தொகுத்தவர்: திரைஞானி

ஆயிரக்கணக்கான குடும்பங்கள் காலங்காலமாக
பயன்பட்டுவரும் கிராம்புத் தைலத்தின்
நன்மைகளை ப்ராமிஸில் கண்டுணர்ந்தனர்.

# கிராம்புத் தைலம் கொண்ட இணையற்ற டூத்பேஸ்ட் ப்ராமிஸ்

நீங்களும் ஏன் அதை உபயோகிக்கக்கூடாது?






## ப்ராமிஸ்

பற்சிதைவிலிருந்து பாதுகாக்கிறது,
வாய்க்குப் புத்துணர்ச்சி
தருகிறது மற்றும்
துர்நாற்றத்தை அகற்றுகிறது.




3 பல்ஸாரா தயாரிப்பு

ஆரோக்கியமான பற்கள்,
ஈறுகள் மற்றும் புத்துணர்ச்சிமிக்க
மூச்சுக்கு ப்ராமிஸ்.

CHAITRA-BLS-453-R TAM

# வட்டமேஜை

● திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள கிருஷ்ணபுரம் சிற்பங்களுக்குப் பெயர் பெற்றது. அந்தக் கோவில் முன் மண்டபத்தில் பிரமிக்கத் தக்க சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன.

அற்புதமான சிற்பங்கள் இப்போது பாதுகாப்பு இல்லாமல் இருக்கின்றன. அழகு மிக்க சிற்பங்கள் இப்படி அனாதையாகக் கிடப்பது வருத்தத்துக்குரியது.

அந்த ஊரில் உள்ள மக்களுக்கு இதன் அருமை தெரியவில்லை. ஐந்து ரூபாய் கொடுத்து அலங்கார வேலை செய்துள்ள ஒரு பகுதியை உடைத்துக் கொடு என்றால் பாமர மக்கள் அப்படியே செய்து விடுகிறார்களாம். கிருஷ்ணபுரத்தைக் காக்க அரசு உடனே தக்க நடவடிக்கை எடுக்க வேண்டும்.

சென்னை குயிலி ராஜேஸ்வரி

● எமது கல்கி 8-5-83 இதழில் கல்கத்தாவைப் பற்றி வெளிவந்துள்ள ஒரு செய்தித் துணுக்கு கல்கத்தா தமிழர்களுக்கு அதிர்ச்சியைத் தந்துள்ளது. பாரதியின் சிலைக்குக் கீழே சுப்பிரமணிய 'பாரத்' என்று பொறிக்கப்பட்டுள்ளதாக அங்கயற்கண்ணி மைந்தன் குறிப்பிட்டுள்ளார். சிலைத் திறப்பு விழாவில் நான் எடுத்த ஒரு போட்டோவை அனுப்பியுள்ளேன். அதில் ஜோதிபாசு, எம். ஜி. ராமச்சந்திரன் இருவரும் சிலையின் பெயர்ப் பலகைக் கல்லுக்கு இருபுறமும் இருக்கும் நிலையில் 'பாரதி' என்ற சொல் ஆங்கிலத்திலும் வங்க மொழியிலும் சரியாகப் பொறிக்கப்பட்டிருப்பதைக் காணலாம்.

கல்கத்தா-29 என். ராஜா

● நீண்ட நாட்களுக்குப் பிறகு எழுதி இருக்கும் ''இந்திரா பார்த்தசாரதி''யின் ''நியாயங்கள்'' படிக்கும்போது வித்தியாசமாகவும் மனதில் நிற்கக் கூடியதாகவும் இருந்தது.

ஊரூர் வெளிக்கடை ராஜம்'

● கனகபுரா தீர்ப்பு கல்கி கணித்தபடியே ஹெக்டேக்கும் ஜனநாயகத்துக்கும் ஓர் வெற்றி.

கி. இராஜேந்திரனின் ''இரண்டாவது தலைநகர்'' ஓர் அருமையான 'சடையர்!' கல்கியின் நகைச்சுவை, அவரது வாரிசான 'கி.ரா' விடமும் அதிகமாகவே இழையோடுகிறது.. சிந்திக்கவும் வைக்கிறது!

மன்னார்குடி ஆர். பழநிவேல்

● வீடு ஒதுக்கீடு செய்யும் விஷயத்தில் டில்லி வீட்டு வசதி வாரியத்தை தமிழ்நாடு வீட்டு வசதி வாரியம் பின்பற்ற வேண்டுமென்ற பி. எஸ். ஆரின் கோரிக்கை நியாயமான ஒன்றுதான். நல்லவைகளை எங்கு கண்டாலும் அவற்றை ஆதி காலம்தொட்டே பின்பற்றும் தமிழகம் இதையும் எடுத்துக் கொள்ளும் என நம்பலாம்.

கரூர்-2 கே. என். இராமகிருஷ்ணன்

● வைரமுத்துவின் இந்த வாரக் கவிதையில் இலக்கிய நயம் மட்டுமில்லாமல், மனிதாபிமான உணர்வையும் காண முடிந்தது.

வடலூர் வெ. லட்சுமிநாராயணன்

● திருமுல்லை வாயிலுக்கு ஓரிரு தடவை போயிருக்கிறேன். கோவிலில் சுவாமி தரிசனமும் செய்தேன். ஆனால் அப்போதெல்லாம் ஏற்படாத ஒரு ஆன்மிக உணர்வு தெய்வ தரிசனம் கட்டுரையைப் படித்தபோது உண்டாயிற்று. மெய்சிலிர்த்தேன்.

சென்னை சிவராமன்

● கருங்கல் ஆர் ஜார்ஜ் தமது துணுக்கில் குறிப்பிட்டிருப்பது தவறு. நேசமணியின் தேர்தல் சின்னம் பானை அல்ல; குடம்.

நெய்யூர் சி. கல்யாணி

## கிருஷ்ணபுரத்தைக் காப்பாற்றுங்கள்



## அத்தியாயம் 21

**வ**ரதன் அந்த நாலாம் நம்பர் சாராயக் கடை வாசலில் குத்திட்டு உட்கார்ந்திருந்தான். அவனிடம் பதினேழு ரூபாய் தான் இருந்தது.

கோதுமை லாரி கவிழ்ந்து இன்றோடு பத்து நாட்கள் முடிந்து விட்டது. ராவுத்தர் பணம் எழுநூறு ரூபாயோடு கிளம்பி இன்று பதினேழு ரூபாய்தான் மிச்சம். ராவுத்தர் தேடிய மாதிரித் தெரியவில்லை. நெல்லூரில் இரண்டு நாள், பெங்களூரில் இரண்டு நாள் தலைமறைவாக இருந்துவிட்டு ரயில் பிடித்து நேரே திருச்சி வந்து விட்டான். சேலம், நாமக்கல் போகலாம் என்று முதலில் தோன்றிற்று. ஆனால் தண்ணித் தொட்டி வண்டிகள் அதிகம் வராத இடமாக இருப்பதே நல்லது என்கிற எண்ணம் வர சட்டென்று திருச்சிப் பக்கம் வந்து விட்டான்.

தண்ணித் தொட்டி வண்டிகள் அநேகமாய் வடக்கே ஓடுபவை. தொழிற்பேட்டை அதிகம் இருக்கும் பகுதிக்கு லோடு அடிப்பவை. ஹார்பர் லாரிகள் வரும் என்றாலும் வடக்கே இருந்து தண்ணித் தொட்டித் தெருவைத் தொட்டு திருச்சி வருகிற லாரி மிகக் குறைவு. அநேகமாய் வரவே வராது. இந்த ஆனைகட்டி மேட்டுத் தெருவுக்கு, காந்தி மார்க்கெட்டுக்கு வாழைத் தார் எடுக்க வராது. ஆனைகட்டி மேட்டுத் தெரு வாழை மார்க்கெட் பகல் நேர மார்க்கெட். காலை பத்து மணிக்கு மார்க்கெட் மெல்லத் திறக்கும். பழ மண்டிகள் ஒவ்வொன்றாய் திறந்து பூஜை போட்டுப் பலகாரம் முடித்து, வெள்ளைச் சட்டையும், குங்குமப் பொட்டும் அத்தர் மணமுமாய் வியாபாரிகள் நடமாடத் துவங்குவார்கள், பகல் ஒரு மணி சாப்பாட்டுக்குப் பிறகு மாட்டு வண்டிகளில் வாழைத்தார் சுற்று வட்டாரக் கிராமங்களிலிருந்து இறங்க, நாலு மணிக்குக்



கொஞ்சம் கறுகறுப்பாகும். பச்சை பச்சையாய் வாழைத்தார் ஆயிரக் கணக்கில் தெரு முழுக்க அடைத்துக் கிடக்கும். விளக்கு வைக்கிற நேரம் ஏலம் துவங்கும். ரகம் வாரியாக பேயன், பூவன், ரஸ்தாளி, நேந்திரம் என்று தார் கட்டிப்போட்டிருப்பார்கள். ஆள் உயரத்துக்கு இரண்டங்குலம் மரப் பலகை. அதில் ஒற்றை மின் விளக்கு நீளமாய் ஒயர் சுற்றப்பட்டு வாழைத் தாரில் சாய்த்து வைத்திருப்பார்கள். இருட்டியதும் ஒயரின் மறு முனையை கடை விளக்குப்ளக்கில் சொருகிவிட்டு தோளில் விளக்கு தாங்கியபடி அட்டி அட்டியாய் ஒரு ஆள் நகர்த்த வியாபாரிகள் வாழைத் தார் அட்டியைச் சூழ்ந்து கொள்வார்கள். ஏலம் துவங்கும்.

பதினாறு தார் பூவன் முப்பது ரூபா. கேள்வி முப்பது ரூபா. முப்பத்தி நாலு. முப்பத்தி நாலு. முப்பத்தி எட்டு. நாப்பது. நாப்பத்தியாறு. நாப்பத்திஏழு. நாப்பத்தி ஏழு... விலை கட்டாது. மேலே கேளு. ஐம்பது. ஐம்பத்தியொன்னு. ஐம்பத்தியொன்னு... ஐம்பத்தியொன்னு ஆனைப்பாலு. ஆனை பாலு என்கிறவன் கடைசித் தொகை கேட்டவன். எட்டுத் தார் பூவன் பதினாறு ரூபா. கேள்வி பதினாறு ரூபா...

ஆயிரக் கணக்கில் தார்கள் இரவு பதினொன்று வரை ஏலம் விடப்பட்டு வாழை இலையில் சுற்றப்பட்டு புகை போடப்போகும். புகை போட்டதும் வாழை இலைச் சுற்றோடு வண்டியில் ஏற்றப்பட்டு விடும். சென்னையிலிருந்து திருச்சி வரையுள்ள பெரிய ஊர்களில் மொத்த வியாபாரிகள் வாழை எடுப்பது திருச்சியில்தான். அநேகமாய் ஆனை கட்டி மேட்டுத் தெருதான்.

ஏற்றப்பட்ட சரக்கை அங்கங்கே இறக்கி விட்டுச் சென்னைக்குப் போக வேண்டும். அநேகமாய் ஜாம் பஜார்தான் சென்னைக்கு வாழை மார்க்கெட். கொத்தவால்சாவடி மாதிரி பெரிய மார்க்கெட்.

# இரும்பு குதிரைகள்



பாலகுமாரன்

இந்த வாழைத்தார் லாரியில்வேலேகிடைத் தால் தண்ணித் தொட்டித் தெருப் பக்கம் போக வேண்டாம். ஜாம் பஜாரோடு நின்று விடலாம்.

இந்த வேலையாவது அங்கு ஏறி உட்காரு கிற லாரியாவது தன்னைத் தள்ளி விடாமல் இருக்க வேண்டும். டிறைவி லேசென்ஸ் எடுத்து பன்னிரண்டு வருடம் ஆயிற்று. கவிழ்ந்து போன கோதுமை லாரியோடு ஐந்தாவது விபத்து. விபத்து என்று வந்துவிட்டால் முதலாய் அடிபடுகிறவன், அதிகம் பாதிக்கப் படுகிறவன் டிரைவர்தான். தன் தவறோ, பிறர் தவறோ, வண்டி பழுதோ அவன் முதுகில் விழும் பிரம்படிதான் அதிகம். சிகப்பு சிகப்பாய் லேசென்ஸில் விபத்துக் குறிப்பு எழுதப்பட எழுதப்பட டிரைவர் மதிப்புக் குறையும். ராசி இல்லாதவன் என்று பெயர் வந்து விடும்.

சாராயக் கடையில் டிரைவர்கள், க்ளீனர்கள் வந்து போன வண்ணம் இருந் தார்கள். கூலி ஆட்கள் அதிகம் குடித் தார்கள். க்ளீனர் பையனைத் தோளோடு அணைத்துக் கொண்டு வாடா சிலுக்குப் பையா என்று அவனை வெட்கப்பட வைத்த படி உள்ளே போனவன் வருகைக்காக வர தன் கழுகாய்க் காத்திருந்தான்.

''சாமுவேல் அண்ணாச்சி கவரெல்லாம் ஆடுது. பாத்து வாங்க.''

''போடா கூறு கெட்டவனே, நாம ஆடி னாத்தானேடா கவரு ஆடும்.''

''நீ ஆடறியே,நானூறுக்கே சுத்துறியே.''

''நானா, ஆடறேனா... குடியைப் பத்தி ஒனக்கு ஒன்னும் தெரியாதுடா பையா... டான்ஸ் ஆடறவன் குடிச்சுட்டுப் பாடப் படாது. குளறும். பாடறவன் குடிச்சா ஆடப்படாது. தடுக்கும். நமக்குத் தெரிஞ் சதைச் செய்ய உக்காந்துடணும். லாரிக் காரன் குடிச்சுட்டு வண்டி எடுத்தா நூல் பிடிச்ச மாதிரி ரோட்ல போகும். அன் னாண்ட இன்னாண்ட நவராது. என்னாங்க நான் சொல்றது...''

வரதன்எழுந்துநின்று'' ஆமாங்க''என்றான்.

''நீங்க சாப்பிட்டீங்களா?''

''இப்பதாங்க சாப்ட்டேன்.''

கணவன்: ''இன்னிக்கு உன்னால எனக்கு நூறு ரூபாய் கிடைக்கப்போவுது!''
மனைவி: ''எதை வச்சுச் சொல்றீங்க?''
கணவன்: ''உன் கம்மலை வச்சு!''
—எஸ் என். மாடசாமி



''பழம் புடிக்க வந்திருக்காப்லியா?''

''இல்லீங்க. வண்டி ஆப்டுமான்னு பாக்கறேன்.''

''லாரி டிரைவருக்கு இல்லாத வேலையா? என்ன கேக்கறீங்க ட்ரிப்புக்கு?''

''நாஷ்டா துட்டுப் போதுங்க.''

''சிலுக்குப்பையா...கூட்டிக்கிட்டுவாடா. நம்ம வண்டிக்கு மாத்து டிரைவர் போட் டுக்குவோம்.''

லாரி புரோக்கர் மேஜையைச் சுற்றி மடக்கு இரும்பு நாற்காலிகள் போடப் பட்டிருந்தன.

ஏலத்தில் கை மாறின வாழைத் தார்களை அடையாளம் காட்டிவிட்டு வியாபாரிகள் லாரி ரசீது வாங்கினார்கள். வாடகைப் பணம் கட்டினார்கள். இரவு நேரம் ஆக ஆக நிறைய ரசீதுகள் கிழிக்கப்பட்டன. லாரி ரசீதுகளின் இரண்டாவது காப்பி தனித் தனியே கவரில் போடப்பட்டு கவர் மீது இறக்கப்பட வேண்டிய இடமும் வியாபாரி யின் பெயரும் எழுதப்பட்டிருந்தன.ஒரு லாரி யோடு ஆனதும் கவர் தனியே அடுக்கப்பட்டு கயிற்றால் கட்டப்பட்டது. கட்டப்பட்ட கவர் பண்டில்கள் எட்டு ஒன்பது தேறிற்று.

மார்க்கெட் அடங்கும் வேளையில் டிரை வர்கள் முகம் துடைத்து திருநீறு இட்டுக் கொண்டார்கள். புரோக்கர் கடைகளின் வாசலில் நின்றார்கள்.

புரோக்கர் கடை மேஸ்திரி வெளியே வந் தான். ''மெட்ராஸ் லோடு காலை எட்டு மணிக்குள்ளாறப் போணும். ஆயிரத்தி எரநூறு.''

சாமுவேல் முன் வந்து ஆயிரம் என்றான்.

மெட்ராஸ் லோடு ஆயிரம், நேர் லோடு மேல கேளுப்பா.''

''எட்டு நூறு'' எவனோ குரல் கொடுத் தான்.

''எட்டு நூறு. ஃபுல் லோடு.''

''எழுநூறு'' சாமுவேல் கூவினான்.

''சாமுவேல் எழுநூறு.''

''அறநூறு'' வேறு குரல் வாடகையைக் குறைத்தது.

''ஐநூறு'' சாமுவேல் விடாப் பிடியாக இறக்கினான்.

''சாமுவேல் ஐநூறு'' வேற யார் கேக் கறது. ஐநூறு.''

''முந்தாநாள் எட்டு நூறுக்குப்போனேன். இன்னிக்கு ரேட்டு பாரேன். ஐநூறுக்கு வண்டி நவுருது. அடாவடியடிச்ச வியாபா பாரம்.''

''அடாவடி என்னய்யா. மெட்ராஸ்ல லாரி வாடகை ஆயிரத்துக்கும் மேலே ஓடுது. எம்டியாக்கூட வண்டி போகுது. ஐநூறு கசக்குதோ. கடைசி தரம் ஐநூறு. கடைசித் தரம் ஐநூறு. வாயத் தொறந்து கேளுய்யா. ஐநூறு சாமுவேல்.''

சாமுவேல் வண்டியில் மடமடவென்று வாழைத் தாரும் இலைக் கட்டும் ஏற்றப் பட்டன. தார்ப்பாய் போட்டு கட்டப்பட் டது.

''சிலுக்குப் பையா. வண்டிய அந்தாலே வுட்டு எடுக்கச் சொல்லு. மார்க்கெட் எப்டி


பாரசீகத்திலிருந்து உங்கள் சமையலறைக்கு
டைமண்ட் மார்க்
வி.பி
கூட்டுப்பெருங்காயம்
எண்பது வருடகால
அனுபவத்தின்
தரச் சிறப்பு மிக்க
தயாரிப்பு.
வி.பி. பட் & கம்பெனி,
25, சிவராம் சாஸ்திரி தெரு,
சென்னை-600 003.
தலைமை அலுவலகம்: பம்பாய்
VP
COMPOUNDED
ASAFOETIDA
V.P. BHATT & CO
SOBHAGYA

தாண்ட்றுன்னு ஒரு தடவை பார்த்துக் கலாம்.''

வரதன் வண்டியில் உட்கார்ந்து கும்பிட் டான். லாரி உரசாமல் ரிவர்ஸ் எடுத்து கியர் மாற்றி முன்னேறி மார்க்கெட் விட்டு வெளியே வந்தான். க்ளீனரும் சாமுவேலும் ஏறிக்கொள்ள கொள்ளிடம் பாலம் தாண்டி ஞன். சமயபுரம் திரும்பினன்.

''உங்க பேரு என்னு பெரியவரே.''

''வரதனுங்க.''

''வண்டி எப்டி இருக்கு?''

''கடைசீ கீரு சிக்குதுங்க. மத்தபடி குத்தம் இல்லீங்க.''

''அழுத்திப் போடு. கையெடுக்காதே. கொஞ்சம் உட்டீன்னு கீர்ல நின்னுடும்.''

''ஆச்சரியமா இருக்குதுங்க.''

''என்னது?''

''ஐநூறுக்கு வண்டி மெட்ராஸ்போவுதே''

''நேரம்தான்.''

''கட்டுபடியாவுங்களா?''

''மெட்ராஸ்ல ஹார்பர் லோடு இரும்பு சாமான் டைப்பு லோடுன்னு கெடைக்கும். அத வச்சித்தான் இங்க ஒத்துக்கறது. அது கம்பெனி லோடு. பால் மாருத ஆயிரத்து எரநூறு கெடைக்கும்.''

''எனக்கு மனசு கேக்கலீங்க. பட்டு பட் டுன்னு சரிய வுட்டீங்களே.''

''நானூறுக்குப் பேயாக் காத்துக்கிட்-டிருக்கானுங்க. இன்னிக்கு முழிச்ச நேரம் டீசல் துட்டு நஷ்டமில்லாத ஒடுது.''

''டீசல் நானூறு ஆவாதுங்களா?''

''ஆவும். நடுவுல நம்ப செலவு அம்பது போச்சன்னு அம்பது நிக்கும்.''

''அம்பது ரூபாய்க்கு இத்தினி கஷ்டப் படணுமான்னு யோசிக்கிறேன்.''

''வேற வழி. வண்டிங்க பெருத்துப் போச்சே.''

''இங்க தொட்டீங்க இல்லியா?''

''என்னது...?''

''தொட்டி டீசல் தொட்டி. மெட்ராஸ்ல இருக்காப்பல.''

''அதெல்லாம் கெடையாது.''

''தொட்டின்னு என்னுப்பா?'' பையன் ஆவலுடன் கேட்டான்.

''டாங்கர் போவுதில்ல. அதுல கறந்து விக்கிற எடம்.''

''கறக்குறதுன்னு?''

''பசு மாட்ல பால் கறக்கறதில்லியா அது மாதிரி டீசல் டாங்கர்ல நூறு எரநூறு லிட்டர் கறந்துடுவாங்க.''

''சீலு இருக்காது?''

''சீலு ஒடைக்காத கறப்பாங்க.''

''எப்டீப்பா அது?''

''வேலேதான்... பெரியவரே, அங்க டீசல் கெடைக்குமா?''

''பாதி வெலேக்குக் கெடைக்கும்.''

''திருட்டு டீசலா?''

''ச்சு... கூவாதேடா. திருட்டு டீசல்னு என்னு... துட்டு இல்லாதியா நாம வாங்க முடியும். ஏங்க வரதன் ஒங்களுக்குத் தொட்டி எடம் தெரியுமா?''

''தெரியுமுங்க.''

''என்ன வெலே?''



''பையனுக்கு இப்போ இருக்கிறது ஒரே ஒரு தோஷம்தான். அதுகூட கல் யாணம் ஆனல் கழிந்து விடும்.''

''என்ன தோஷம் ஜோசியரே?''

''சந்தோஷம்.''

கீழை. அ. கதிர்வேல்

---

''ஆளப் பொறுத்து.''

''பேர் பாதிக்குக் கெடைக்குமா?''

''இப்பக் கடனுக்கூடக் கெடைக்கும்.''

''டீசலு கடனுத் தராஞ?''

''ஆமாங்க. டீசல் ஊத்திக்கினு ட்ரிப்பு முடிஞ்சு நாலு நாளு கழிச்சு துட்டுத் தரலாம்.''

''எங்கித்த எடம்?''

''தண்டையார்ப்பேட்டைப் பக்கம்.''

''லோடு எறக்கிட்டுக் காட்டறீங்களா?'' வரதன் சரியென்று தலையசைத்தான்.

''எதுல கலந்து விக்கிறாேஞ.''

''சரக்கு சுத்தங்க. திருட்டுச் சமாச்சாரம் தான். ஆனு கெடுதல் இருக்காது. நாளேக்கு நாலு வண்டி வர வேணுமா. அதமாதிரி தப்புச் செய்ய மாட்டாங்க.''

''இனி அங்கயே போட்றலாம். அப்பத் தான் கட்டுப்படியாவும். நா மாத்திக்கிடட் டுமா வண்டிய?''

''இல்லீங்க. விழுப்புரம் போய்ட்டுப் பாத்துக்கலாம்.''

''பார்ரு இதுக்குப் பையா. என்னமோ மூணு மூணுன்னியே. பெரியவரு பேர் பாதி லாபம் காட்ரூ. தெரியாமயா நான் மாத்து டிரைவர் எடுத்தேன். பெரியவரே படுக்கட்டுமா.''

''சரிங்கய்யா.''

''ஐயால்லாம் வேணும். சாமுவேல்னு கூப்பிடுங்க.'' டிரைவர் பின் பக்க பெரிய சீட்டில் மல்லாந்து படுத்தான். தூங்கிப் போனன்.

அந்தச்சேரியில் ஒருகுடிசைக்குள் இரண்டு ஆட்கள் தூங்காமல் காத்திருந்தார்கள். குடிசைக் கதவை இறுக்க மூடி தரையில் காது வைத்துக் காத்திருந்தார்கள். தரைக்கு அடியே ஒரு ஓங்கார சத்தம் ஒடிக்கொண் டிருந்தது. கனங்கென்ற ஓசையோடு ஓங் காரம் பெரிதாயிற்று.

இருவரும் பெரிதாகப் புன்னகை செய் தார்கள்.

(தொடரும்)

# வாசகர் விமர்சனம் போட்டி முடிவு

## ஆறுதல் பரிசாக கல்கி விடுமுறை மலர் 1983 பெற்ற நூறு வாசகர்கள்

(1) வி. பூஷணம், 'ஹலிடே இன்', தபால் பெட்டி எண் 3541, அபுதாபி, U.A.E. (2) வி. ஜாபர் அலி, தபால் பெட்டி எண் 4303, துபாய் U.A.E. (3) திருமதி ஜெய. நாகராஜ், 19, புல்லா அவென்யூ, ஷெனாய்நகர்; சென்னை-30 (4) என். மங்களாம்பாள், 15-ஏ, பட்டாம்பாள் தெரு, அம்பத்தூர், சென்னை-53;(5) பி. தம்பிராஜ், 12, உலகநாதபுரம், எண்ணூர், சென்னை-57; (6) ஜி. ஸ்வாமிநாதன், L/61, ஜி. எம். ஐ. ஜி. ப்ளாட்ஸ், நவபாரத் காலனி, கே. கே. நகர், சென்னை 78 (7) பி. ராய், 1, நாகப்பய்யர் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை-5; (8) என். சுவாமிநாதன், 12-ஏ, ராமசாமி தெரு, ராதா நகர், குரோம்பேட்டை, சென்னை-44; (9) கே. ஜோதி பிரகாஷ், 4, நீலகண்டன் தெரு, சூளைமேடு, சென்னை-94; (10) எஸ். சுந்தரராமன், 54, ஸ்ரீ சாயி காலனி, சென்னை-92; (11) வி. வேதகிரி, 14, சி.எம். பாண்டுதெரு, கணபதிநகர், நாகல்கேணி, சென்னை-44; (12 சோமநாத சுப்பிரமணியம், மெயின் ரோடு, ரெம்பாக்கம் அஞ்சல், பாண்டிச்சேரி-607404 (13) எல். புருஷோத்தமன், B.No.A.21,H No 895 ஆஸ்டின் டவுன் லேஅவுட், பங்களூர்-47; (14) சாரதா கிருஷ்ணன், 840, ஹால் இரண்டாவது ஸ்டேஜ், இந்திராநகர், பங்களூர்-38; (15) கே. நஸீருதீன், வி.17, திருச்சி ரோடு, பிளாக்-11, நெல்வேலி-3; (16) வி. நடனசபாபதி, 6, கோட்டை மேட்டுத் தெரு, மேற்குப் புவனகிரி-608601; (17) கே. அனந்தபத்மநுபன், 6-93-ஏ, ஈ.பி. காலனி, நாமக்கல்-637002; (18) பி. இப்ராஹிம், 104, கவடகாரா தெரு, திண்டுக்கல்-624001 (19) வி. எஸ். விஸ்வநாதன், ஈ-125, சந்தானம் ரோடு, டி.வி.எஸ். நகர், மதுரை-3; (20) எச். வி. சீதாகுமாரி, D/o எச். எஸ். வாசுதேவய்யா, முதல் கிரேடு ஃபோர்மேன், தமிழ்நாடு மின்சார வாரியம், பாரதி PH III POகோயம்புத்தூர்-641112:(21)வி. சேகர், S/o திரு பழனிசுவாமி, ராமன்நகர், மேட்டூர் டேம்-3: (22) கமலா மோகன்ராஜ், 8, ஜெகஜீவன்ராம் தெரு, திருவள்ளுவர்நகர், பம்மல், சென்னை-75: (23) எம். தங்கவேல், 6, பஜனைக்கோவில் தெரு, கொளத்தூர், சென்னை-99; (24) ஏ. ஆர். ராஜாமணி, 12/4 W.E.A புதுதில்லி-5;(25) கே. பிருந்தா W/o டி. ஆர். குப்புசாமி, திருகருகவூர் எஸ்.ஓ. தஞ்சாவூர் RMS :(26) ஏ. என். சந்திரமௌலி, 285, பெல் காலனி, ஜலஹல்லி, பங்களூர்-13; (27) என். லட்சுமணன், 17, பத்மாவதியார் சாலை, சென்னை-84; (28) பி. சசிகுமார், S/o திரு பாலகிருஷ்ணன், 24, சங்கரன் பிள்ளையார் கோயில் தெரு, வெளிப்பாளையம், நாகப்பட்டினம்; (29) ரி. கிருஷ்ணமூர்த்தி, 382-டி, ரயில்வே காலனி திருச்சி-20: (30) டி. பங்கஜம், ஏ-1, கரு(ப்)பைய நாடார் கிழக்குத் தெரு, அருப்புக் கோட்டை, ராமநாதபுரம் மாவட்டம்: (31) திருமதி சாவித்திரி வெங்கடேஸ்வரன், 10-2-230/C, சாலை எண் 1, மேற்கு மருது பள்ளி, செகந்திராபாத்-26: (32) ஆர். குருவேம்பு, 4 110, நான்காவது தெற்குத் தெரு, தியாகராஜ் காலனி, மகராஜ் நகர், திருநெல்வேலி-11: (33) ஏ. ஜெ. ராஜ், 99, 19வது குறுக்குத் தெரு, லஷ்மிபுரம், உல்சூர், பெங்களூர்-8: (34) வி. ரங்கசுவாமி, ஐயனேரி அஞ்சல், கோவில்பட்டி (வழி), திருநெல்வேலி-627701: (35) எம். அப்பாசாமி, 282, கொன்னூர் நெடுஞ்சாலை, அயனாவரம், சென்னை-23: (36) எம். பார்வதி, C/o முத்துசாமி, 14, பஜனை மடத் தெரு, புளியங்குடி, திருநெல்வேலி-627855: (37) எல். சுந்தசாமி, 215, திருச்சி மெயின் ரோடு, சேலம்-6 (38) எம். சாந்தி, 39, எல்லையம்மன் கோவில் தெரு, சிதம்பரம்: (39) திருமதி உஷா சன்னன், C/o பி. கண்ணன், பிளாட் நெ. 23 வேணுகோபாலபுரம், நங்கநல்லூர், சென்னை -61: (40) வி. குலசேகரன், 19-சி, ஜாபர் பேக் தெரு, செஞ்சி-604202:(41) பி. அங்காள பரமேஸ்வரி, D/o ஆர். சி. நாதன், 35-பி, கென்த போடிகாரா தெரு, கரூர், திருச்சி மாவட்டம்; (42) வசந்தா சுப்பிரமணியன், D/105, பி.ஆர். கே. சண்முகம் ரோடு, சங்கீதா காலனி, கே. கே. நகர், சென்னை-78; (43) என். கிருஷ்ணமூர்த்தி, 3/5, படேல் சாலை, வேர் ஹவுஸ் (அருகில்) விருதுநகர், ராமநாதபுரம் மாவட்டம்; (44) எஸ். நடராஜன், மெட்ராஸ் சிமெண்ட்ஸ் லிமிடெட், ஆர். ஆர். நகர், ராமநாதபுரம் மாவட்டம்-626204: (45) பி. நடராஜன், மன்னை இண்டஸ்ட்ரீஸ், 191, சதி ரோடு, கணபதி-641006: (46) ஆர். சந்திரசேகரன், டைப்-2 குடியிருப்பு, ரகு நகர், அரக்கோணம்-631004: (47) வி. ராஜசேகரன், ஆசிரியர், 15-ஏ-1, பள்ளிக்கூடத் தெரு, சைதாப்பேட்டை, ஆரணி-632301: (48) எம். எஸ். அர்ஜுனன், S/o எம்.வி. சென்னியப்ப கவுண்டர், 5, வேலப்ப கவுண்டர் தெரு சின்ன மட்டூர் கோபிசெட்டிபாளையம், கோயம்பத்தூர்: (49) ஆர். முரளிதரன், முதுங்கபட்டி அஞ்சல், நாமக்கல் தாலுகா, சேலம் மாவட்டம்: (50) கே. வி. கணபதி சுப்பிரமணியம், C/o பி. ஜி. மீனாட்சி, 28, 9வது தெரு, காந்திபுரம், கோயம்பத்தூர்-641018:

[மேலும் ஐம்பது வாசகர்கள் பற்றிய விவரம் அடுத்த இதழில்]



: மேனகா



: சந்திரசேகர்





: ஸ்ரீபால்



ராமையா



: பங்காரு அடிகள்



: ஸ்ரீதேவி

# நீங்கள்

○ க. மன்சூர், திருமங்கலக்குடி
? சஞ்சை இருக்கும்போதே மேனகா சதி செய்தார் என பிரதமர் ஒரு பேட்டியில் கூறியுள்ளதைக் கவனித்தீரா?
! 'மேனகா—தம் வீட்டுக்கு வந்து சேர்ந்ததே ஒரு சதித்திட்டத்தின் விளைவுதான்' என்று மாமியார் கூறுவதும், 'இந்திராவின் மூளை களைப்படைந்து போயிருக்கிறது; அதனால் பிதற்றுகிறார்' என்று மருமகள் பேசுவதும்.. அன்றைக்குச் சதி ஏதும் நடந்ததோ இல்லையோ இன்று ஒரு சதி நடப்பதைப் புலப்படுத்துகின்றன.

○ சுஜாதா பிரியன், ஒன்னிபாளையம்
? சமீபத்தில் தாங்கள் விரும்பிப் படித்த ஒரு புத்தகம்?
! சென்னை நகர போலீஸ் கமிஷனர் ஸ்ரீபால் எழுதி, திருமகள் நிலையம் (13, எர்ரபாலு தெரு, சென்னை-1) வெளியிட்டுள்ள சிந்தனைப் பூங்கா. நூலின் சரளமான நடை ஸ்ரீபால் அவர்களின் பேச்சை நேரில் கேட்பது போல் இருக்கிறது. நூல் வெளிவீட்டு விழா அன்றே ஆயிரம் பிரதிகள் விற்பனை ஆயிற்றாம், வியப்பே இல்லை!

○ ஆர். இளங்கோ, ஏந்தல்
? கல்யாணத்துக்கு முன் சாந்தி முகூர்த்தம்போல் பட்ஜெட்டுக்கு முன்பே வரி போடும் மத்திய அரசுக்கு நுழைவு வரி பற்றிப் பேசத் தகுதி இல்லை என்கிறாரே காளிமுத்து?
! கணவன் ரெட் லைட் ஏரியாவுக்குப் போய் வந்தான் என்பதால் மனைவி சோரம் போகத் தயாராவதா? மத்திய அரசு தவறு செய்கிறது என்பதால் மாநில அரசு செய்யும் தவறுகள் நேராகி விடாது.

○ த. சத்தியநாராயணன், அயன்புரம்
? மின் கட்டணம் உயர்ந்துவிட்டதே?
! கொஞ்சமாகவா உயர்ந்தது? ஷாக்கிங்காக யூனிட்டுக்குப் பத்துப் பைசா ஏற்றி விட்டார்களே! அட, ராமச்சந்திரா!

○ எஸ். ஏ. யூசுப், அதிராம்பட்டினம்
? கவி விமர்சகர் தம் முதுகுக்குப் பின்னால் ஒளிந்துகொண்டு ஏதோ சொல்வதாக அரசு சொல்லியுள்ளது பற்றி....?
! ஒளியும் எண்ணமும் இல்லை: ஒளியும் அளவுக்கு முதுகு அகலமாகவும் இல்லை!

○ ப. பழனி, சென்னை
? அமெரிக்கர் பாராட்டும் வகையில் தமிழக எழுத்தாளர் நிலை உயர வேண்டும் என்கிறீரே, தமிழர் தமிழிலேயே எழுதிக் கொண்டிருக்கும் போது அமெரிக்கர்கள் பாராட்டுவது சாத்தியமா?
! யார் ஆங்கிலத்தில் எழுத வேண்டாம் என்கிறார்கள்? தமிழில் எழுதினாலும் சர்வதேசத் தரமான இலக்கியம் நிச்சயம் உலகின் கவனத்தை ஈர்க்கும். இங்கு தயாராகும் பிஸ்கெட்டும் சிகரெட்டும் கூட சர்வதேச மெடல்கள் பெறுகின்றனவே!

○ ஆர். விமலா வித்யா, நாமக்கல்
? மேல் மருவத்தூர் பங்காரு அடிகள் ஆன்மீக பண்பாட்டு மகளிர் சிறப்பு மாநாட்டைத் தலைநகரில் நடத்தியதால் ஏதாவது பயன்கள் ஏற்பட்டிருக்கிறதா?
! அண்ணாசாலை தேனாம்பேட்டை பகுதி முழுவதும் செந்நிறமாக மாறியிருந்ததானது அவரது செல்வாக்கை உணர்த்தியது. மக்களுக்கும் இறைவனுக்கும் இடையில் ஓர் அர்ச்சகருக்கு அவசியமில்லை. மக்களே ஆண்டவனை நெருங்கி அபிஷேக ஆராதனைகள் செய்து மகிழலாம் என்ற கருத்து புதுமையானது. அச்சத்தை நீக்கி வழிபாட்டை எளிமையாக்கி கருணைக் கடலாம் கடவுளைக் குழந்தையாக்குகிற முயற்சி இது. ஓர் இரவு பெய்த மழையைக் கண்கண்ட பலன் என்று கூறலாம். கண்காணாத பலனான ஆன்மீக அனுபவங்களுக்கு அளவுகோல் கிடையாது.

○ ஜி. பாபு, திருச்சி
? நம்மவர் மைல் கல்லைக்கூடக் கும்பிடுவார்கள் என்று நெடுஞ்செழியன் கேலி செய்ய, அவர் தலைவர் எம். ஜி. ஆர். மட்டும் மூகாம்பிகைக் கல்லை வழிபட அடிக்கடி செல்கிறாரே?
! தலைவரிடம் மட்டுமின்றி தமது மனைவியிடமிருந்துகூட இவ்விஷயத்தில் தமக்குக் கருத்து மாறுபாடு உண்டு என்று நெடுஞ்செழியன் கூறலாம். ஆனால் மைல் கல்லை வழிபட்டால்தான் என்ன தவறு? மஞ்சள் பொடியைப் பிடித்து வைத்து விநாயகரை அதில் ஆவாகனம் செய்து பூஜிப்ப

# கேட்டவை

தில்லையா! தூணிலும் துரும்பிலும் இறைவனைப் பிரகலாதன் காணவில்லையா? மைல் கல்லில் ஆண்டவனைத் தரிசிப்பதும் சாத்தியமே. அதற்கு மனம் பக்குவப்படவேண்டும்.

○ இராமு குமார், திருவானைக்கோயில்

? புதுவை கம்பன் விழாவில் புலவர் ரேனை நோக்கி செருப்பெறிந்த பண்பாளர்களைப் பற்றி....?

! கருத்து மாறுபாடுகளை செருப்பெறிந்து தெரிவிக்க வேண்டும் என்பதை நமது எம். எல். ஏக்களிடம் கற்றவர்கள்.

○ மூ. நவீன், பங்களூர் ★

? இந்தியாவில் இன்று நேர்மையாக நடந்து கொள்ளும் மாநில முதல்வர் யார்?

! புதுசாகப் பதவிக்கு வந்த ஓரிருவர் இருக்கிறார்கள். ஆனால் தேர்தல் நெருங்க நெருங்கத்தான் அவர்கள் நேர்மைக்குச் சோதனை வரும். அப்போதுதான் அளக்க வேண்டும் அவர்களின் மன உறுதியை!

○ பாரதி ரங்கன், கும்பகோணம்

? ராஜாஜி, கல்கி, தி. ஜானகிராமன் போன்ற பழம்பெரும் எழுத்தாளர்கள் பேணிக் காத்த இலக்கியப் பண்பாடு துர்வாசர்களாலும் நக்கீரன்களாலும் சந்தி சிரிப்பதைக் கவனித்தீர்களா?

சர்ச்சைகள் வாதப் பிரதிவாதங்கள் முன்பும் உண்டு. கருத்து மாறுபாடுகள் இருப்பது இயல்புதான். நல்லதும் கூட. ஆனால் முன்பெல்லாம் விவாதங்களில் கண்ணியம் இருக்கும். இன்றோ பிரச்னையை மறந்து தனி நபர் தூஷணையில் இறங்கும் போது துர்நாற்றம் வீசுகிறது.

○ வாசுகி, கெங்கவல்லி

? சந்திரசேகர் பாதயாத்திரை தேவையற்றது என்று எழுதினீரே? இப்போது என்ன சொல்கிறீர்?

! அசடு வழிகிறேன்... வழி...வழி...

○ லட்சுமி செங்குட்டுவன், வேலூர் (சேலம்)

? 'நுழைவு வரியை வாபஸ் பெற மாட்டேன். எத்தனை போராட்டங்கள் நடத்தினாலும் மக்களின் ஆதரவுடன் அவற்றைச் சந்திப்பேன்' என்று எம். ஜி. ஆர். கூறியிருப்பது பற்றி?

! மக்களின் ஆதரவு இருக்கிறது என்ற தைரியத்தில் மேன்மேலும் தவறுகள் செய்வது நல்லாட்சி ஆகாது. மக்கள் ஆதரவு இல்லாவிடினும் அவர்களுக்கு நல்லதையே செய்வேன், தீங்கிழைக்க மாட்டேன் என்ற உறுதியோடு இருக்கத்தான் வீரம் வேண்டும்.

○ எஸ். கணேசன், திருநெல்வேலி

? மூன்றாம் பிறையில் சிறப்பாக நடித்தும் தேசிய அவார்டு ஸ்ரீதேவிக்குக் கிடைக்கவில்லையே?

! கமல் இதற்கு அழகாகப் பதில் சொல்லியுள்ளார்: 'மூன்றாம் பிறையில் என்னைவிட ஸ்ரீதேவி சிறப்பாக நடித்திருக்கலாம். ஆனால்சிறந்த ஆண் நடிகர் என்ற முறையில்தான் எனக்குப் பரிசு. எனக்கும் ஸ்ரீதேவிக்கும் இடையில் போட்டி இல்லை'' என்று எடுத்துக் காட்டியிருக்கிறார். ஸ்ரீதேவியை விடச் சிறப்பாக வேறு ஒரு படத்தில் வேறு ஒரு நடிகை நடித்ததுதான் ஸ்ரீதேவிக்கு அவார்டு கிட்டாமல் போகக் காரணம்.

○ எஸ். ரவிந்திரன், கடலூர்

? நடிகர் பிரேம் நஸீர் கேரளாவில் ஏதேனும் அரசியல் மாற்றம் ஏற்படும் என்று நம்புகிறீர்களா?

! அத்தகைய நம்பிக்கை கேரள மக்களுக்கே இல்லை என்று அண்மையில் திருவனந்தபுரம் போயிருந்தபோது கேள்விப்பட்டேன். கல்வி அறிவும் கம்யூனிஸத்தின் அளாவளும் உடைய கேரள மக்களிடம் ஹீரோ ஒர்ஷிப் அதிகம் கிடையாது.

○ ஆர். கே. லிங்கேசன், மேலக்கிருஷ்ணன்புதூர்

? செல்வி ஜெயலலிதா குமுதத்தை விட்டு விட்டு தாயில் தொடர்வது பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

! குமுதம் வாசகர்கள் தப்பினார்கள்; தாய் வாசகர்கள் சிக்கினார்கள்.

○ ஆர். அர்ஜோபி, குடியாத்தம்

? பி. எஸ். ராமையாவின் மறைவு குறித்து?

! சிறுகதைகள், நாவல்கள் கட்டுரைகள் ஆகியவற்றில் மட்டுமின்றி நாடகங்கள் எழுதுவதிலும் சிறந்து விளங்கிய மேதை. எழுத்தாளர் என்ற முறையில் குறிப்பிட்ட ஒரு வட்டத்துக்குள் அவர் அடக்கப்பட்டாரென்றாலும், அந்த வட்டத்துக்கு வெளியே உள்ளவரையும் மதித்துப் போற்றியது அவர் தனிச் சிறப்பு. திறமையை எங்கு காணினும் வலியச் சென்று மனம் விட்டுப் பாராட்டி ஊக்குவித்த பெருந்தகை.

★ ரு. 10 பரிசு பெறுபவர்:

மூ. நவீன்,
83, பாஷ்யம் நகர்
ஸ்ரீராம்புரம்
பங்களூர்-560 021

தாரிகா

# மின்கட்டணம் உயர்ந்துவிட்டதே?

# துணுக்.. துணுக்.. துணுக்..




தென் காசியை அடுத்து அமைந்துள்ள மூன்று ஊர்களின் பெயர்கள் கீழ்க்கண்டவாறு பொருத்தமாக அமைதுள்ளன:
தாய்விளை
சேய்விளை
பேத்திவிளை
தென் காசியில் உள்ள ஒரு டீக்கடையின் பெயர் இது:
''ரொக்க விலான் காபி டீ ஸ்டால்''

—ராஜேந்திரன்

குழந்தையின் அழுகையைப் பாட்டுப் பாடி, தாலாட்டித்தான் நிறுத்த வேண்டும் என்ற காலம் போய் விட்டது. குழந்தை அழும் ஒலியை டேப் செய்து குழந்தை அழும்போது ஒலிக்கச் செய்தால் குழந்தை அழுகையை நிறுத்தி விடும் என நீண்ட ஆராய்ச்சிக்குப் பின் மன இயல் நிபுணரான ரஷ்சல் கிளார்க் மார்ட்டன் கண்டறிந்துள்ளார்.

—எஸ். விஜயா சீனிவாசன்

அவர்: ''ஒரு நாளைக்கு நீங்க மந்திரியா வருவீங்கன்னு ஜோசியர் சொன்னது சரியாப் போச்சு.''
இவர்: ''எப்படி?''
அவர்: ''எங்க கூட்டணிக்கட்சி ஜெயிச்சு எனக்கு மந்திரி பதவிகொடுத்தாங்க. ஒரே நாளில் மந்திரி சபை கவிழ்ந்திட்டுது!''

—எஸ். வேங்கடராமன்



''இப்போ இருக்கிற வரட்சியில் மணமக்களை ஆசீர்வதிக்க அட்சதை அரிசி கொடுக்க வேணாம்னு சொன்னேலே கேட்டீங்களா?''
''ஏன் இப்போ என்ன ஆச்சு?''
''தாலி கட்டினப்போ ஒரு அரிசியும் விழலே. எல்லாத்தையும் தின்னுட்டாங்க!''

—கிழை அ. கதிர்வேல்

''காலம் தலைகீழா மாறிப்போச்சி!''
''எப்படி?''
''முந்தியெல்லாம் மழை பெய்ஞ்சா ஸ்கூல் லீவ் விடுவாங்க. இப்ப மழை பெய்யலேங்கறதுக்காக லீவை நீடிக்கப் போறாங்களாம்!''

—வெ. சீதாராமன்



## பொது அறிவுப் பக்கங்கள்

# ‘சித்ரமாலா’வின் ஸ்பெஷாலிடி என்ன?



✕ சுதாகர்

✕ ராமசந்திரன்

இந்த வாரம் மேற்கு மாம்பலத்தில் மெட்ரோ வாட்டர் தொட்டிக்கருகில் சில கல்லூரி மாணவர்களைச் சந்தித்து விஷயத்தைச் சொன்னதும் சுமார் அரைமணி நேரத்தில் ‘க்விஸ்’ஸுக்குத் தயாராகிவிட்டனர்.

பங்கேற்றோர்: ராமசந்திரன்
சுதாகர்
(பச்சையப்பன் கல்லூரி)

ராமசாமி
ராஜு
(டி. பி. ஜெயின் கல்லூரி)

க்விஸ்ஸில் நான்கு பேரும் கேட்டுக் கொண்ட கேள்விகளின் பட்டியல்:

(1) ‘சோம்னாம்புலிஸம்’ என்பது என்ன?

(2) சிலோன் பாஸ் போர்ட் என்றால் என்ன? விளக்கிச் சொல்ல முடியுமா?

(3) 1 முதல் n வரையிலான எண்களின் வர்க்கங்களின் (Square) கூட்டுத் தொகை கண்டு பிடிக்க என்ன ஃபார்முலா?

(4) சென்னை-4 என்பது மயிலாப்பூர், சென்னை-33 என்பது மே. மாம்பலம் இதெல்லாம் தெரியும். சென்னை - 78, சென்னை-22, சென்னை-40, சென்னை-53 இந்த இடங்களெல்லாம் எவை?

(5) ‘ஜுஹு’ பீச் எங்கே இருக்கிறது?

(6) கடைசியாக சென்னை மாநகராட்சிக்கு எந்த வருடம் தேர்தல் நடந்தது?

(7) எம். ஜி. ஆர். சிவாஜி இரண்டு பேரும் சேர்ந்து நடித்த தமிழ் சினிமா எது?

(8) டெலிவிஷனில் தேசிய நிகழ்ச்சியில் ஒளிபரப்பப்படும் ‘சித்ரமாலா’ நிகழ்ச்சியின் ஸ்பெஷாலிடி என்ன?

(9) இந்திய டெஸ்ட் கிரிக்கெட் டீமில் இடம் பெற்ற முதல் தமிழ் நாட்டுக்காரர் யார்? அவருக்குள்ள இன்னொரு சிறப்பு என்ன?

(10) ‘லுகிமியா’ என்பது என்ன?

(11) பெல்ஜியம், உகாண்டா இந்த நாடுகளின் தலைநகரங்கள் எவை எவை?

(12) இந்திய ஜனாதிபதியின் சம்பளம் எவ்வளவு?

(13) கிதாஞ்சலி எக்ஸ்பிரஸ் எங்கிருந்து எங்கே செல்கிறது?

(14) பனாரஸ் இந்து பல்கலைக் கழகம்—இதை நிறுவியவர் யார்?

(15) ‘ஹைட்ரோஃபோன்’ என்பது என்ன?

(16) நம் உடலில் மொத்தம் எத்தனை எலும்புகள் இருக்கின்றன?

இந்தக் கேள்விகளுக்கெல்லாம் உங்களுக்கு விடை தெரிகிறதா? கொஞ்சம் முயற்சி செய்து பாருங்களேன். தெரியாவிட்டால் பரவாயில்லை. விடைகள் கீழே உள்ளன. பார்த்துக் கொள்ளுங்கள்.

(1) சிலருக்குத் தூக்கத்தில் நடக்கும் வியாதி இருக்குமே அதற்குத்தான் ‘சோம்னாம்புலிஸம்’ என்று பெயர்.

(2) உலகில் எங்கு செல்ல வேண்டுமானாலும் இந்திய அரசு இன்டர்நேஷனல் பாஸ் போர்ட் வழங்குகிறது. ‘சிலோன் பாஸ் போர்ட்’டும் இந்திய அரசு வழங்குவதுதான். ஆனால் இது ஸ்ரீலங்காவுக்கு மட்டுமே செல்லுபடியாகும். இதற்குக் கட்டணம் ரூ. 8.

✕ ராஜு

✕ ராமசாமி



(3) $\frac{n(n+1)(2n+1)}{6}$

(4) சென்னை-78 கே. கே. நகர்
சென்னை-22 ராஜ்பவன்
சென்னை-40 அண்ணாநகர்
சென்னை-53 அம்பத்தூர்

(5) பம்பாயில்.

(6) 1968ம் ஆண்டில். (அடுத்த தேர்தல் எப்போது என்பது ஆண்டவனுக்காவது தெரியுமா என்பது சந்தேகமே!)

(7) கூண்டுக்கிளி.

(8) 'சித்திரமாலா' டெல்லியிலிருந்து திங்கட் கிழமைகளில் இரவு 8-45 மணிக்கு ஒளிபரப்பாகும் நிகழ்ச்சி. இதில் இந்தியாவின் பல்வேறு மொழித் திரைப்படங்களிலிருந்து பாடல் காட்சிகள் இடம்பெறுகின்றன. தேசிய ஒருமைப்பாடு வளர வழி செய்யும் நிகழ்ச்சியாம் இது.

(9) எம். ஜே. கோபாலன். இவரது இன்னொரு சிறப்பு: இரண்டு விளையாட்டுக்களில் அகில உலக அளவில் இந்திய டீமில் இடம் பெற்ற ஒரே ஆட்டக்காரர். அவ்விரு விளையாட்டுக்கள்: கிரிக்கெட், ஹாக்கி.

(10) உடலில் தேவைக்கு அதிகமான அளவில் ரத்தத்தில் வெள்ளணுக்கள் உற்பத்தியாவதால் வருகிற ஒருவகை ரத்தப் புற்று நோய் லுகிமியா.

(11) பெல்ஜியம் — புருசல்ஸ்
உகாண்டா — கம்பாலா

(12) ஜனாதிபதி மாதமொன்றுக்குச் சம்பளம் என்று பெற்றுக்கொள்வது ரூ. 10,000 மட்டும். இது தவிர வாடகை இன்றி ராஷ்டிரபதி பவனில் வசிக்கலாம். மற்றும் பல அலவன்ஸுகள். (கொசுறு: ஜனாதிபதிக்கு பதவிக் காலம் முடிந்ததும் ஆண்டுக்கு பென்ஷன் ரூ. 15,000)

(13) கல்கத்தா — பம்பாய்க்கு இடையில்.

(14) மதன் மோகன் மாளவியா

(15) தண்ணீருக்கடியில் ஒலியை அளவிடும் கருவி.

(16) 306. ('சின்ன வயசில் தப்பு செய்தா எலும்பை எண்ணியிருப்பார் உங்க அப்பா. மொத்தம் எத்தனை எலும்புன்னு சொல்லியிருப்பாரு. அதான் 'டக்'குன்னு சொல்லிட்டே' — சரியாய் விடை சொன்னதும் எதிர் டீம் அடித்த கமெண்ட்)

வெற்றி பெற்றவர்கள் பச்சையப்பன் கல்லூரிமாணவர்கள். 'க்விஸ்' முடியும் சமயத்தில் மெட்ரோ வாட்டர் லாரி வர தெருவில் ஒரே பரபரப்பு. வெற்றி பெற்றதை விட அதிக மகிழ்ச்சி மாணவர்களுக்குத் தண்ணீர் லாரி வந்துவிட்டதில்!

தொகுப்பு: எஸ். சந்திரமௌலி, ப்ரியன்

## நாடகத்துக்குள் ஒரு நாடகம்!

● ஆவடி லயன்ஸ் கிளப் ஆதரவில் பூர்ணம் விசுவநாதனின் 'கடவுள் வந்திருந்தார்' நாடகம் நடைபெற்றது.

நாடகக் கதைப்படி சாமியாராக வேஷம் போடும் பூர்ணத்தைப்பேட்டி காணவும், புகைப்படமெடுக்கவும் பத்திரிகையாளர்கள் வருகிறார்கள். அப்படி ஒரு புகைப்படக்காரராக நடிக்க எனக்கு நாடகக் குழுவினர் அழைப்பு விடுத்தார்கள்.

உற்சாகத்தோடு மேடை ஏறினேன். நிருபர்கள் 'சுவாமிஜியைப்பேட்டி காண நான் படக், படக்கென்று படமெடுத்துத் தள்ளிக் கொண்டிருந்தேன். நடிகர்களில் ஒருவர் என்னிடம் வந்து ''சார், ஃப்ளாஷ் மட்டும் தட்டுங்க: பிலிமை வீணாக்காதீங்க'' என்றார்.

✕ பிரபுசங்கர் ✕ பூர்ணம்



நான், ''பாதகமில்லை'' என்றேன். ''என்னுடைய காமிரா 35 எம்.எம். ஆதலால் 'ப்ளக்' என்ற சப்தம் ஒவ்வொரு பிரேம் தட்டும்போதும் கேட்கும். அது மைக் மூலமாக ஆடியன்ஸுக்குக்கேட்டால் தத்ரூபமாக இருக்கும்'' என்று அவரிடம் சொன்னேன்.

தத்ரூபமாக நடிப்பதற்காக நான் செய்த இன்னொரு சங்கதிதான் பூர்ணம் உட்பட அந்தக் காட்சி நடிகர்கள் எல்லோரையும் ஒரு கலக்குக் கலக்கி விட்டது. கதைப்படி ஒரு பாத்திரத்தைப் பூர்ணம் கவிழ்க்க, வெற்றுப் பாத்திரத்திலிருந்து விபூதி விழும் மகிமையைக் கண்டு எல்லோரும் வியக்கிறார்கள்.

வேண்டுமென்றே இந்தக் காட்சியை நான் கோட்டை விட்டு விட்டு, ''சுவாமி ப்ளீஸ், ஒன்ஸ் மோர். நான் படம் எடுக்க விட்டுட்டேனே, எங்க எடிட்டர் கோபிப்பாரே'' என்று நானாக டயலாக் பேச ஆரம்பித்து விட்டேன்.

அனைவரும் ஒரு கணம் திகைத்து நிற்க, சக நடிகர் ஒருவர் வந்து, ''போங்க சார், எல்லாரும் போங்க. சுவாமிஜியை மேலும் தொந்தரவு செய்யாதீங்க'' என்று கூறிப் பிடித்து வெளியே தள்ளி விட்டார்.

நாடகம் முடிந்த பிறகு பூர்ணம் உட்பட அனைவருமே என் 'நடிப்பை'ப் பாராட்டினார்கள். ஒரு குறும்புக்காரர் மட்டும் ''அசல் போட்டோகிராபர் நீங்கதான் சார். சரியான சமயத்தில் கோட்டை விட்டுட்டு அப்புறம் மறுபடி போஸ் தரச் சொன்னீங்களே!'' என்றார்.

அனுபவம், புகைப்படம்: பிரபுசங்கர்



● எஸ். ஜெயபாலன், குளமேடு.

என் அபிமான நடிகர் சரத்பாபுவைத் தமிழில் பார்த்து ரொம்ப நாளாயிற்றே!

ரொம்பத்தான் ஏக்கப்படுகிறீர்கள். கமலஹாசனோடு பாடி, தோளைச் சுற்றிக் கை போட்டு, அப்புறம் முறைத்துக் கொண்டு வாய்க்கு வந்தபடி திட்டி, பின்னால் வில்லனை உதைப்பதற்கு அதே கமலஹாசனோடு சேர்ந்து கொண்டு... உணர்ச்சிகளைக் குவிய வாய்க் கொட்டுகிற நல்ல பாத்திரம். வாய்ப்பை வசதியாய்ப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார் சரத் பாபு ஆந்திர உச்சரிப்புடன் — சட்டம் படத்தில்.

● சௌம்ய நாராயணன், அரகண்டநல்லூர்

மாடர்ன் டிரஸ்ஸாகட்டும், புடவையாகட்டும் — பிரமாதமாய்ப் பொருந்துகிறது என்று சொல்லிக் கொள்ள ஆளே கிடையாதா?

பூர்ணிமா ஜெயராம் ஒருத்தர் தான் இருக்கிறார் என்று பிடிவாதமாக நினைத்திருந்ததில் மண்ணை அள்ளிப் போட்டு விட்டார் மாதவி, சட்டத்தில். உயரத்திலாகட்டும், உடல் கட்டிலாகட்டும், மாதவிக்கு எல்லா உடைகளும் 'கச்'சிதமாய்ப் பொருந்துகின்றன. கமலஹாசனுக்கு இணையாய் நாட்டியம் ஆடுகிற திறமையும் இருக்கிறது. (அதிர்ஷ்டமும் இருந்தால் பரவாயில்லையோ?)

● கோபாலன், இரோம்பேட்டை

அபூர்வ ராகங்கள் — கமல்
ராஜபார்வை — கமல்
இவர்கள் இனிமேல் பிறக்க மாட்டார்களா?

உங்கள் வீட்டுத் தோட்டத்தில் மட்டும் தினமும் குறிஞ்சி பூக்கிறதாக்கும்? 'சகலகலா வல்லவனை' முழுசாய்ப் பயன் படுத்திக் கொள்வதில்தான் எல்லோருக்கும் ஆசை. பரதமா, கதகளியா, டிஸ்கோவா 'என்று சிலுக்குச் சவால் விட்டு ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு துக்கடாக் கொடுக்கிற வேகத்தைப் பார்த்தால்; போகப் போக 'பாரத்' நடிகர் பரத நடிகராகி விடுவாரோ என்று நெஞ்சில் 'பக்' 'பக்' என்கிறது. சந்தேகமிருந்தால் தொட்டுப் பாருங்களேன்.

● ஆர். பிரபாகரன், பட்டுக்கோட்டை

சட்டம் படத்தில் எங்கள் சின்னராணி சிலுக்கின் சீற்றம் எப்படி?

நீங்கள்தான் மெச்சிக் கொள்ள வேண்டும். அனாடமி கற்றுக் கொள்கிற மாணவர்களுக்கும், மாடல் வைத்து வரையப் பழகுகிற கலை அன்பர்களுக்கும் அவர் 'விஷயதானம்' அளிக்கலாம் — (ஸ்... அப்பாடி... மேற்பார்வை பார்த்துக் கொண்டிருந்த வீட்டு ராணி விலகி உள்ளே போயாகி விட்டது) என்னது? சின்ன ராணி சிலுக்கா? அட, அட, அட! என்ன அற்புதமான சொற்

# 'சட்டம்' படம் பார்த்துவிட்டீர்களா?

பதில்கள் - ஜெயமன்மதன்

றெடா! என்னதான் சொல்லுங்கள், வெளியில்திட்டிக் கொண்டே உள்ளுக்குள் பூரித்துப் பூரித்துச் சிஹுக்கைப் பார்ப்பது 'திருட்டுதம்' அடிப்பதற்கு இணையாக இல்லை?

● பி. விமலா, சென்னை-600001

சட்டம் படத்தில் யார் யார் நடித்து இருக்கிறார்கள்?

பாட்டுப் புத்தகத்தின் விலை பத்து பைசாவோ என்னவோதான்! இருந்தாலும் மனசு கேட்கவில்லை என்பதற்காக... பாவப்பட்ட வில்லன்களாய் ஜெய்சங்கர், விஜயகுமார். காற்றில் கரைகிற கற்பூரமாய் பந்தநல்லூர் சந்திர வதன மனோரமா. விட்டர் விட்டராய் அசடு வழிந்து விட்டு அம்போ' என்று இறந்து விடுகிற மகேந்திரன் (மகேந்திரன் இறந்து போகிற காட்சியில் கூட துக்கத்தை விடச் சிரிப்புதான் மிஞ்சுகிறது) போய் வந்து, போய் வந்து. கௌரவமாய் வந்தாலும் கூட மனத்தில் ஈர வர்ணமாய் ஒட்டிக் கொள்கிறவர் பாலாஜி!

● ஏ. பி. வி. தர்மாம்பாள், பொட்டல் புதூர்.

'அம்மம்மா சரணம் சரணம்' என்ற பாடல் இடம் பெற்றிருப்பது 'சட்டம்' படத்தில் என்கிறேன் நான். இல்லை என்கிறார் என் கணவர்.

உலக மகா பிரச்னைதான்!

உங்களுக்குத்தான் வெற்றி. ஏதாவது பந்தயம் கிந்தயம் கட்டியிருந்தால் பாதியை இந்தப் பக்கம் தள்ளி விடுங்கள். நிற்க. பாடல் எப்படி? கொஞ்சமில்லை! இன்னும் இரண்டு மூன்று பாடல்கள் கூட லிஸ்டில் சேர்ந்துவிடும் போலிருக்கிறது. (விரும்பிக் கேட்கும் நேயர்கள் லிஸ்ட்) என்ன இருந்தாலும் இசையமைத்திருப்பவர் ராஜாவுக்குத் தம்பியில்லையோ!

● வேங்கடபுரம் பார்த்தசாரதிகிருஷ்ணன், சென்னை-600.005.

சட்டம் படம் பார்த்து விட்டீர்களா?

ம்!

உங்களுக்குத் திருப்தியாய் இருந்திருக்காதே. விமரிசகர் பாணியில் சொல்ல வேண்டுமானால் முதல் பாதி கை ரிக்ஷா. பிற்பாதி எஸ். எல். வி. – 3. இருந்தாலும் என்ன? கமல் திறமைசாலி. பாலாஜி புத்திசாலி. (உங்கள் பெயரைக் கொஞ்சம் சின்னதாய் வைத்துக் கொள்ளக் கூடாதா? எழுதினால் கை சுளுக்கிக் கொள்ளும். கூப்பிட்டால் வாய் சுளுக்கிக் கொள்ளும்.)

## பாலச்சந்தர் ரஸித்த நாடகங்கள்!

பூரணம் நியூ தியேட்டர் ராஜா அண்ணாமலை மன்றத்தில் நாலுவது தடவையாக, டாக்டர் நரேந்திரன் மீது விநோத வழக்கு தொடர்ந்தது. பாலச்சந்தர், கமல், சுஜாதா மூவரும் வழக்கைக் காண வந்திருந்தனர்.

சுஜாதா அலுவலக விஷயமாய் பெங்களூரிலிருந்து ஐதராபாத் போக வேண்டியிருந்ததால், ஐதராபாத்திலிருந்து மெட்ராஸுக்கு ஒரு ஃப்ளையிங் ட்ரிப் அடித்துவிட்டு மறுபடி ஐதராபாத்துக்குப் போய்விட்டார். மிஸஸ் சுஜாதா விழாவில் மிஸ்ஸிங். அவர் ஏதோ பரீட்சைக்கு சீரியஸ்ஸாகத் தயார் செய்து கொண்டிருப்பதாய்த் தெரிய வந்தது. ஆட்டோகிராப் போட வைத்தே சுஜாதாவின் விரல்களை ஒரு வழி பண்ணிவிட்டார்கள், வாசகர்கள்.





பாலசந்தர் விழாவில் பேசியது: ''நான் என் வாழ்நாளில் இரண்டே இரண்டு நாடகங்களைத்தான் மிகவும் ரசித்திருக்கிறேன். ஒன்று இந்த டா. ந. வி. வழக்கு. இன்னொன்று எதுவென்று இப்போது சொல்ல மாட்டேன்.'' (இப்படிச் சொன்னவுடன் என் பக்கத்தில் நின்று கொண்டிருந்த (நாடகத்தில் வஸந்த் பாத்திரத்தில் நடிக்கும்) தியாகராஜன் இன்னொன்று தண்ணீர் தண்ணீராக இருக்குமோ என்று ஒரு யூகத்தை வெளிப்படுத்தினார். (யூகம் சரிதானா என்பதை பாலசந்தர்தான் சொல்ல வேண்டும்)

கடைசிக் காட்சிக்கு முன் விழா. விழா முடிந்ததும், பாலசந்தர், கமலிடம், ''கமல் கடைசி சீன் அமர்க்களமாய் இருக்கும். டோண்ட் மிஸ் இட். போய்ப் பார்'' என்று அனுப்பி வைத்தார். சிஷ்யரும் குருவின் கட்டளைப்படி நாடகம் பார்க்கப் போனார். (பாலசந்தர் 99வது தடவை நடந்தபோதே வந்து முழு நாடகத்தையும் பார்த்து விட்டாராம்.) பின் சீரியஸாக அவரும் சுஜாதாவும் 'அயல் நாடுகளில் தியேட்டர்கள்' பற்றி சீரியஸாக அலசினார்கள்.

கொசுறு: ஒவ்வொரு தடவையும் நாடகத்தின் கடைசிக் காட்சி முடிந்து, திரை இறங்கியதும், நடிக, நடிகையர் அனைவரும், பூர்ணம் விசுவநாதனின் காலைத் தொட்டு வணங்குவதும், அவர் எல்லோரையும் ஆசீர்வதிப்பதும் பூர்ணம் குழுவினர் செண்டிமெண்டலாகக் கடைப்பிடிக்கும் விஷயம்.

— எஸ். சந்திரமௌலி

**பழனியாண்டி கூறுகிறார்!**

# "எனக்குள் ஒரு ஆத்ம பரிசோதனை"

"நான் எந்தப் பதவிக்கும் ஆசைப்பட்டது கிடையாது. கிடைத்தவற்றை வைத்துக் கொண்டு ஒரு மனத் திருப்தியுடன் வாழ்ந்து பழக்கப்பட்டவன்'' என்கிறார் தமிழ்நாடு இ. காங்கிரஸின் தலைவராக நியமிக்கப்பட்டிருக்கும் பழனியாண்டி.

அவரைச் சந்திக்கச் சென்றபோது எவ்வளவு எளிமையாக காட்சியளிக்கிறார் என்று மனத்தில் தோன்றிற்று. அதிக சப்தம் போடாத பேச்சு, மாறுபட்ட கருத்துக்களையும், மென்மையாகத் தெரிவிக்கும் சுபாவம், பெரியார், சிறியார் என்று பாராது எழுந்து நின்று எல்லோருக்கும் விடை கொடுப்பது போன்ற இவரது செயல்கள், தொண்டர்களை இவர் பக்கம் இழுத்து விடும். ஆனால் தலைவர்கள்....?

திருச்சி மாவட்டம் லால்குடி அருகில் கட்டிடத் தொழிலாளி ஒருவருக்கு மகனாக (''எங்கப்பா எழுபத்தைந்து வயது வரை கட்டிடத் தொழிலாளியாக வேலை செய்து வந்தார்'') பிறந்த பழனியாண்டி படித்தது எஸ். எஸ். எல். சி. வரைதான். குடும்பத்தின் வறுமை நிலை அவரை மேலும் படிக்க முடியாதவராக ஆக்கி விட்டது. 18 வயதில் பஸ் கண்டக்டர் வேலை, பிறகு திருச்சியில் நண்பர் ஒருவருடன் ஒரு தியேட்டரைக் குத்தகைக்கு எடுத்து நடத்தினார். சுதந்திரப் போராட்டத்தில் தலைமறைவாய் இருந்து விடுதலைப் பணி ஆற்றினார். பிறகு தொழிற் சங்கங்களில் ஈடுபட்டு, அதனுடன் காங்கிரஸ் கட்சிப் பணிகளையும் சேர்த்துச் செய்து வந்த பழனியாண்டி வாழ்க்கையில் பல ஏற்ற இறக்கங்களைக் கண்டவர்.

''1951ல் என் திருமணத்துக்கு வந்திருந்த தலைவர் காமராஜ் காலையிலிருந்து மாலைவரை திருமண மண்டபத்திலேயே தங்கியிருந்து என்னை வாழ்த்தி விட்டுப் போனது மறக்க முடியாத விஷயம்'' என்கிறார் பழனியாண்டி. இவருக்கு இரண்டு பையன்களும் ஒரு பெண்ணும் இருக்கிறார்கள்.

''காமராஜை அரசியல் குரு என்கிறீர்கள், 1969ல் இந்திராவின் தலைமையை எப்படி ஏற்றுக் கொண்டீர்கள்'' என்ற கேள்விக்கு ''காமராஜ் அவர்களுடன் சேர்ந்திருந்த சில சக்திகள் கட்சியை அழிவுப் பாதைக்கு இட்டுச் செல்லும் என்று எனக்குத் தோன்றியதால் இந்திராவின் தலைமையை ஏற்றுக் கொண்டேன்'' என்கிறார்.

1946 முதல் டால்மியாபுரம் சிமெண்ட் தொழிற்சாலைத் தொழிலாளர் சங்கத்துக்கு இவர்தான் தலைவர் (ஒரு சாதனைதான்!) அங்கு 1978ல் நடந்த போராட்டத்தின் போது போலீசாரின் தடியடிகளைச் சந்தித்தார் பழனியாண்டி. விசாரணைக் கமிஷன் வைக்க வேண்டும் என்று எதிர்க் கட்சிகள் பிரச்சினையை அரசியலாக்க முயன்றபோது முதல்வர் எம். ஜி. ஆர். அவர்களைச் சந்தித்து 'எங்கள் தொழிலாளர்களும் போலீஸ் மீது கல் எறிவதில் ஈடுபட்டார்கள், அதனால் போலீஸ் சற்று வேகமாக சக்தியை உபயோகப்படுத்த வேண்டி வந்தது: இதற்கு விசாரணைக் கமிஷன் தேவையில்லை'' என்று உண்மை நிலையைக் கூறியவர் பழனியாண்டி. (ரொம்ப ஆச்சரியமான விஷயம்தான்)

''நீங்கள் தலைவராக வருவீர்கள் என்று எதிர்பார்த்தீர்களா?''

''அம்மா அவர்கள் நான்கு பேரை டெல்லிக்கு அழைத்திருந்தார்கள். (பெயர்களைச் சொல்லிவிட்டு ''அதெல்லாம் போட்டுடாதீங்க'') என்னை நியமித்திருப்பதாகச் செய்தி வந்ததும் என்னையே நான் ஆத்ம பரிசோதனை செய்து கொண்டேன். இந்தப் புதிய பதவியால் எந்த மாற்றத்தையும் என்னுள் ஏற்படுத்திக் கொண்டு விடாமல் என் அடக்கத்தையும் எளிமையையும் தொடர்ந்து கடைப்பிடித்து வரவேண்டும் என்று மனத்துக்குள் உறுதி பூண்டேன்.''

ஆறு மாதத்திற்கு, ஒரு வருடத்துக்கு ஒரு தலைவர் என்றிராமல், ஒருவரைத் தொடர்ந்து நீண்ட காலத்திற்குப் பணியாற்ற விட்டால் இ. காங்கிரஸ் கட்சி வளருவதற்கு வாய்ப்பு இருக்கிறது. ஆனால் அது நடக்குமா? இங்குதான் ஆயிரத்தெட்டு கோஷ்டிகள் இருக்கின்றனவே!

-ப்ரியன்

புகைப்படம்: சுபா



# படுகொலைக்கு ஆளான பண்பாளர்!



○ மாலதி



○ திரு. ஞானசம்பந்தம்

கனரா பாங்க் கிளை மானேஜர் விடுமுறையில் செல்ல, அவருக்குப் பதிலாக பொறுப்பேற்க வந்தார் லட்சுமணன். அன்று மாலை அந்த பாங்க் ஊழியர்கள் அவரைப் பார்த்து''ஸார்! ஸப்ஸ்டிடியூட்டா வந்திருக்கீங்க, சீக்கிரம் வீடு திரும்பிடுங்க!'' என்றார்கள்!

கர்நாடகா பாங்க் அதிகாரி ஞானசம்பந்தம் கொலை செய்யப்பட்டதானது இந்த அளவுக்கு பாங்க் ஊழியர்களைப் பாதித்திருக்கிறது. ஞானசம்பந்தம், விடுமுறையில் சென்றிருந்த பாரிமுனை கர்நாடகா பாங்க் மானேஜருக்குப் பதில் தற்காலிகப் பொறுப்பேற்க வந்தவர்தான்!

சென்னையையே கதி கலங்க வைத்திருக்கும் இந்தக் கொலையில் மரணமடைந்த ஞானசம்பந்தம் பற்றி அறிய அவர் பணியாற்றிய தம்பு செட்டி தெரு கிளைக்குச் சென்றேன். கொலை நடந்து இரு தினங்கள் ஆகிவிட்டன. அரசுடைமையாக்கப்படாத வங்கி அது. மெல்ல மெல்ல அலுவலகம் இயங்க ஆரம்பித்திருந்தது. இன்னும் முழு சுறுசுறுப்புப் பெறவில்லை. ஞானசம்பந்தம் பற்றிக் கேட்டேன். அவரைப் பற்றி ஆர்வத்துடன் பலர் பேச ஆசைப்பட்டாலும் போலீஸுக்குப் பயந்து வாய் மூடி மௌனியானார்கள். வங்கியின் அபிவிருத்தி அதிகாரி திரு ராஜன் என்னை எப்படி வெளியே அனுப்புவது என்பதிலேயே குறியாக இருந்தார்.

அயனாவரத்தில் ஞானசம்பந்தத்தின் வீட்டுக்குப் போனேன். சொந்தத்தில் கட்டிய புதிய வீடு. இன்னும் வேலை கொஞ்சம் பாக்கியிருக்கிறது. வாழை மரமும் மாவிலைத் தோரணமும் அகற்றப்பட்டுச் சில நாட்கள் கூட ஆகியிராது.... அதற்குள்....

மயான அமைதி..... துக்கத்திலிருந்து மீளாத முகங்கள்.... அழுது சிவந்த கண்கள். மறைந்தவரின் ஒரே மகள் மாலதி தட்டுத் தடுமாறிக் கூறுகிறார்:

''புதிய சொந்த வீட்டுக்கு வந்து இருபது நாள்தான் ஆகிறது. அன்று சந்தோஷத்தில் அப்பா துள்ளினார். இன்று துயரத்தில் நாங்கள் துடிக்கிறோம்!''

வேளாளர் மரபினரான ஞானசம்பந்தத்தின் ஒரேமகன், மோகன், சேலம் கர்நாடகா பாங்கில் பணியாற்றுகிறார்.

மாலதி தொடர்கிறார்: ''வேலையில் கண்ணும் கருத்துமாக இருந்தார் அப்பா. இரவு வெகு நேரம் கழித்துத்தான் வீடு திரும்புவார். மற்றவர்கள் வேலையையும் தாமே இழுத்துப் போட்டுக் கொண்டு செய்வார். எதையும் நாளைக்கு என்று ஒத்திப் போட அவருக்குப் பிடிக்காது. லீவு நாட்களில் கூட வேலைக்குப் போவார். இதனால் அவரை நாங்களே அதிக நேரம் பார்த்துப் பேச முடிந்ததில்லை. பீச், சினிமா என்று அவரோடு நாங்கள் போனதே கிடையாது. வீடு, ஆபீஸ் இதுதான் அவரது உலகம்.''

சிகரெட்,வெற்றிலைப்பாக்கு போன்ற எந்த விதப் பழக்கமும் இல்லாத ஞானசம்பந்தம் தினமும் காலையில் ஐந்து நிமிஷம் மட்டும் பிரார்த்தனைக்கு ஒதுக்குவார். அப்புறம் ஆபீஸுக்குப் பறப்பார்!

''ஒரு முறை காசி கயா என்று சுற்றுலாப் போனோம். நாங்கள் பார்த்தது க்ஷேத்திரங்களை.அவர் நினைத்தது கர்நாடகா வங்கியை. அப்பாவை 'கர்நாடகா வங்கியின் தூண்' என்று சேர்மன் பாராட்டியிருக்கிறார்!''

கோபம் அறியாத. மரியாதை தெரிந்த பண்பாளரான ஞான சம்பந்தம் எதையும் ரசித்துச் சாப்பிடுவார். நீரிழிவு நோய் அவருக்கு இருந்தது. ஆனால் கோதுமை சாதத்தையும் ருசித்து உண்பார். பிடித்தது சிக்கனம்: பிடிக்காதது பொரிக.

''மோகனுக்குச் சேலம் கிளையிலிருந்து சென்னைக்கு மாற்றலாகப் பொரிக செய்ய அப்பா மறுத்து விட்டார். 'நாளைக்கு என்னைப் பற்றி யாரும் தப்பாகப் பேசக்கூடாது பார்' என்றார். அவருடைய அன்பு மரங்களைக்கூடத் தழுவி நின்றது! இந்தப் புதிய வீட்டை எதிரே உள்ள ஒரு தென்னை மரம் மறைக்கிறது இல்லையா? 'அதனால் வீடு பார்வையாகயில்லை, மரத்தை வெட்டிவிடலாம்'என்று மோகன் கூறினான். அப்பா சம்மதிக்கவில்லை'' என்று மாலதி கூறும்போது கண்ணீர் அவர் விழிகளை மறைக்கிறது.

பேட்டி: சிக்கி

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600032. (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani Editor: K. Rajendran



தொண்டை கெட்டுவிட்டதா?
ஆறு வழிகளில் உடனடியாக நிவாரணம் பெற
Menthol IP
Camphor IP
Eucalyptus Oil IP
Thymol IP
Benzyl Alcohol IP
Tolu Balsam IP
ஒரு வொகாஸில்
VOCACIL COUGH DROPS
வொகாஸில்
வொகாஸில் சாப்பிடுங்கள், கரகரப்பு- இருமலிலிருந்து விடுதலை பெறுங்கள் .
தயாரிப்பவர்கள்: பார்லே ப்ராடக்ட்ஸ் பிரைவேட் லிமிடெடின் பார்மஸிடிகல் டிவிஷன்.
PARLE
ULKA-VOC-12 TAM

